# அம்புலிமாமா

மதிமுகம் : 104 ஜனவரி : 2001 புன்னகை : 1



## பொருளடக்கம்



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, No.82, Defence Officers Colony, Ekattuthangal, Chennai - 600 097. Editor: Viswam

### சிறப்புப் படைப்பாக



அரசனின் பரிசு (வேதாளம் சொல்லும் கதை)

சிங்காரத்தின் சித்திரம்





கல்விக் கடல்

இந்தியப் பண்பாடு - வரலாறு



நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதழை அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்காளம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள
மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

## சந்தா விவரம்

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில்
பனிரெண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பனிரெண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டி.யில் அல்லது மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்' என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :

பதிப்பகப் பிரிவு
சந்தமாமா இந்தியா லிமிடெட்
82, டிபென்ஸ் அதிகாரிகள் காலனி
ஈக்காட்டுத்தாங்கல் சென்னை - 600 097.


ஆசிரியர்
**விஸ்வம்**

எல்லாக் கடிதப் போக்குவரத்திற்கும்
சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு
82, டிபென்ஸ்
அதிகாரிகள் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல்,
சென்னை - 600 097.
டெலி / பேக்ஸ் :
2347384, 2347399
ஈ-மெயில் :
சந்தமாமா
@வி.எஸ்.என்.எல்.காம்


அமெரிக்காவில் தனிப் பிரதி 2 டாலர்கள் வருட சந்தா : 20 டாலர்கள்

பணம் அனுப்ப
வேண்டிய முகவரி :

இந்தியா அப்ராட்
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212) 929 1727
பேக்ஸ் : (212) 627 9503



**நிறுவியோர்**

பி. நாகிரெட்டி சக்கரபாணி

# புதிய நூற்றாண்டே வருக

இன்று நாம் இருபத்தொன்றாம் நூற்றாண்டில் இருக்கிறோம். நூறு ஆண்டுகளுக்கு முன் எப்படி இருந்தோம்? அப்போது கார்கள், விமானம், ரேடியோ, தொலைக்காட்சி, இன்டர்நெட், ஈமெயில் என்றெல்லாம் இருக்கவில்லை. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தஞ்சையில் பிரகதீஸ்வரர் ஆலயமும், புவனேஸ்வரில் லிங்கராஜ் ஆலயமும் கட்டி முடிக்கப்பட்டிருந்தன. இதே சமயம் மகம்மது கஜினி இந்தியா மீது படை எடுத்து வந்து, பல நகரங்களில் புகுந்து, பல புராதனச் சின்னங்களை இடித்து நாசமாக்கி விட்டுச் சென்றான். அப்போதே ஒரு புறம் நிர்மாண வேலைகள் நடந்து கொண்டிருக்க, மறுபுறம் அழிக்கும் செயலும் நடந்தது. இது அன்று மட்டுமல்ல, எக்காலத்திலும் நடந்து வருவதை நாம் காண்கிறோம்.

தொன்றுதொட்டு யாவரும் ஆக்க வேலைகளில் தான் ஈடுபட வேண்டுமென்றும், அழிவு வேலைகளைச் செய்யக்கூடாது என்றும் அறிவுரை கூறப்பட்டு வருகிறது. பிரச்சினைகள் நம் மனதில் தான் உள்ளன. அவற்றைத் தீர்க்க அழிவு வேலை சரியல்ல. அழிப்பதால் எதையும் அடையவும் முடியாது. இதற்கு உதாரணமாக இந்தியா பிரிக்கப்பட்டதைக் கூறினாலே போதும். ஹிந்து முஸ்லீம் பிரச்சினையைத் தீர்க்க இந்நாட்டை இரு நாடுகளாகப்பிரித்து விடுவது தான் ஒரே வழி என்று கூறினார்கள். ஆனால் பிரிவினை ஆகியும் அப்பிரச்சினை தீராமல் இன்னமும் மோசமாகிவிட்டதே. இதற்குக் காரணம் மனம் தான்.

இதை உணர்ந்து மனித நேயத்துடன் நாம் வாழ முயல வேண்டும். இந்தப் புத்தாண்டும், புதிய நூற்றாண்டும் பிறந்துள்ள இந்த நல்ல நேரத்தில் யாதும் ஊரே, யாவரும் சமமே என்று சிந்தித்துச் செயல்படுவோமாக.



# 2000ல் சாதனைகள்

## இந்த 2000 மாவது ஆண்டில் நிகழ்த்தப்பட்ட சாதனைகள்



• ஒரு மைக்கை 104 மணி நேரம் கையில் பிடித்தவாறே இசை பாடியது ஒரு சாதனைதானே! மலேசியாவின் புர்ஹான் மோஹதருத்தின் என்பவர் இதனைப் புரிந்திருக்கிறார். இச்சாதனையை அக்டோபர் மாதத்தில் புரிந்த இவர் கோலாலம்பூரில் பெஸ்ட் 104 ரேடியோவில் பணிபுரிபவர். இவர் ஒரு ஞாயிறன்று டிஸ்கில் இசையைப் பதிக்க வைக்க ஆரம்பித்து வெள்ளிக்கிழமையன்று அதனை முடித்தார். ஒவ்வொரு ஆறுமணி நேரத்திற்குப்பின் 15 நிமிட ஓய்வு எடுத்தாராம். இதற்கு முன் இவ்வாறு செய்தது தற்போது எடுத்துக்கொண்ட நேரத்தை விட 10 மணி நேரம் அதிகம்.

• லார்ஸ் கோரன் கார்ல்ஸன் என்பவர் திரைப்பட நடிகர். ஸ்வீடனைச்சேர்ந்த இவர் வசனங்களைப் பேசுவதில் வல்லவர். செப்டம்பரில் மால்மோவில் நடந்த புத்தகச்சந்தையில் இவர் கதைகளை உரக்கப்படிக்க ஒப்புக்கொண்டார். அச்சந்தையில் ஸ்வீடனின் மிகப்பிரபலஎழுத்தாளர்களில் ஒருவரான அகஸ்ட் ஸ்ட்ரிண்ட்பர்கின் புத்தகங்கள் விற்பனைக்குவைக்கப்பட்டிருந்தன. கார்ல்சனிடம் அவரது ஐந்து புத்தகங்கள் உரக்கவாசிக்கக் கொடுக்கப்பட்டன அவர் ஒரு சனிக்கிழமையன்று படிக்கத்தொடங்கி அடுத்த நாள் ஞாயிறுவரை நிறுத்தாமல் 25 மணி நேரம்படித்தார். இடையில்ஒருமணிநேரத்திற்கு ஐந்து நிமிடங்கள் வீதம் நிறுத்தியபடி படித்தார். இதற்கு முன் இவ்வாறு படிக்கப்பட்டது 24 மணி 25 நிமிடங்களில், நல்ல வேளையாக கார்ல்ஸனின் தொண்டை கட்டித் தகராறு செய்யவில்லை. ஆம், அவர்தாம் தூங்கிவிடாமலிருக்க சிரமப்பட வேண்டியே இருந்தது. ஆனால் அவர் படித்ததைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் நிலை என்னவோயாருக்குத் தெரியும்?



• ஆஸ்திரியாவைச் சேர்ந்த ஹன்ஸ் ஸ்வாட்ஸ் அனுப்பிய ஒரு செய்தி 44 ஆண்டுகளுக்குப்பின் அவருக்கே கிடைத்தது ! அதை அவர் தபாலில் அனுப்பவில்லை. 1956ல் மெல்போர்னில் நடந்த ஒலிம்பிக் பந்தயங்களைக் காண அவர் கப்பலில் ஆஸ்திரேலியாவிற்குச் சென்றார். அவர் ஒரு செய்தியை ஆங்கிலத்திலும், ஜெர்மன் மொழியிலும் எழுதி, ஒரு பாட்டிலுக்குள் போட்டு நன்கு மூடி, அதை இந்து மகாசமுத்திரத்தில் எறிந்தார். கடல் அதனை எங்கு வேண்டுமானாலும் கொண்டு போயிருக்கலாம். ஆனால் அப்படி நடக்காமல் அவர் ஆச்சரியப்படும் விதத்தில் செய்தி யுடன் அவர் எறிந்த பாட்டில் அவருக்கே கிடைத்தது.



அப்போது அவர் ஆஸ்திரியாவை விட்டு வந்து நியூஜிலாந்தில் குடியேறி இருந்தார். அவர் வாழ்ந்த கடற்கரையில் அந்த பாட்டில் ஒதுக்கப்பட்டு, அவரிடம் இவ்வாண்டு அக்டோபரில் வந்து சேர்ந்தது அதிசயம் தானே...!

• பொதுவாக எவரஸ்ட் மலைச் சிகரத்தை அடைபவர்கள் தாம் அமைத்த கூடாரத்தி லிருந்து எவரஸ்ட் சிகரத்தை அடைய இரண்டிலிருந்து நான்கு நாட்கள் எடுத்துக் கொள்வார்கள். ஆனால் ஷெர்பாசிஹிரிக்கு அச்சிகரத்தை கூடாரத்திலிருந்து அடைய பதினேழு மணி நேரமே பிடித்தது. இவர் இச்சாதனையை 2000ம் ஆண்டில் எவரஸ்ட் உச்சியை அடையும் போது செய்தார். இது வரை யாரும் புரியாத சாதனை இது. 34 வயதான சிஹிரி முதல் தடவை எவரஸ்ட் சிகரத்தை அடைந்தது அவரது 13வது வயதில். அப்போது அவர் ஒரு கூலி ஆளே. 1989ல் அவர் தனியாகவே அச்சிகரத்திற்குப் போய்விட்டு வந்தார். இது வரை அவர் 10 தடவைகள் எவரஸ்ட் சிகரத்தை அடைந்தி ருக்கிறார். 1995ல் இருமுறை அச்சிகரத்தின் மீது ஏறியிருக்கிறார். 1999ல் பிராணவாயு கொண்டு செல்லாமல் அங்கு 21 மணிநேரம் இருந்திருக்கிறார். மற்றவர்கள் சிகரத்தின் மீது சில நிமிடங்களே இருந்திருக்கிறார்கள் என்று கூறி அவர் புன்னகை புரிகிறார்.

இவர் தம் ஊரில் ஷெர்பா சிறுவர் களுக்கு ஒரு பள்ளிக்கூடம் அமைத்துக் கொடுக்க விரும்புகிறார். ஏனெனில் அச் சிறுவர்கள் தன்னைப் போலப் படிக்காதவர் களாக இருந்து விடக்கூடாதே என்பது தான் அவரது கவலை.



## அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

# மகாதேவ கோவிந்த ரானடே

இந்தியாவின் கடந்த காலத்தை இன்று பெற முடியாது போனாலும் இதன் வருங் காலத்தை நாம் நன்கு உருவாக்கலாமே. நாம் உருவாக்கப்போகும் இந்தியாவில் ஜாதி, மத, இன, நிற வேறுபாடுகளே இராது. நாம் இந்தியன் என்ற எண்ணமே உயர்ந்திருந்து கடைசி வரை இந்தியனாகவே இருப்போம்.

இவ்வாறு அறிவுரை கூறியவர் நூற்றைம்பது ஆண்டு களுக்கு முன் மகாராஷ்டிர மாநிலத்தில் நாசிக் மாவட்டத்து நீபாட் என்ற ஊரில் பிறந்த மகாதேவ கோவிந்த ரானடே. *1842* ஜனவரி *16*ல் பிறந்த இவர் புகழ்பெற்ற சமூக சீர்திருத்த வாதியும், கல்வியாளரும் ஆவார். இவர் பெண்கள் படிக்க வேண்டும் என்று தம் கருத்தை வலியுறுத்தியவர். அக்காலத்தில் பழமையான ஆசாரங்கள் எனக்கூறி இவர் கூறியதைப்பலரும் ஏற்க மறுத்தனர்.



எனவே இதற்குத் தானே முன்மாதிரியாக விளங்க வேண்டும் என்று எண்ணி அவர் படிப்பு வாசனையே இல்லாத தம் 11 வயது மனைவிக்குக் கல்வி புகட்டலானார்.

அவ்வீட்டிலுள்ள மற்ற பெண்கள் இதை எதிர்த்தனர். அவரது மனைவி ரமாபாய்க்குப் பாடம் சொல்லிக்கொடுக்க தினமும் ஒரு ஆங்கிலமாது வந்து போனாள். தினமும் அவள் பாடம் சொல்லிக் கொடுத்து விட்டுப் போனதும் அவ்வீட்டுப் பெண்கள் ரமாபாயைக் குளிப்பாட்டினார்கள்.

மகாதேவரின் தந்தை கோவிந்தராவ் ரானடே கோலாப்பூர் சமஸ்தான நிர்வாக அதிகாரி. ஒரு முறை அவரது மனைவி கோபிகாபாயும் மகன் மகாதேவும், கைக் குழந்தை துர்க்காவும் மாட்டுவண்டியில் கோலாப்பூருக்குச் சென்று கொண்டிருந்தார் கள். அப்போது மூன்று வயதான மகாதேவ் வண்டியிலிருந்து நழுவிக்கீழே பாதையில் விழுந்து விட்டார். கோபிகாபாயின் சகோ தரர் குதிரை மீது அமர்ந்து அந்த வண்டியின் பின்னால் சென்று கொண்டிருந்தார். 'மாமா! நான் கீழே விழுந்து விட்டேன்', என்று ரானடே குரல் கொடுக் கவே அவர் அவனைத் தூக்கித் தன் சகோதரியிடம் கொடுத்தார். அது முதல் கோபிகாபாய் அதிக அன்பு காட்டி ரானடேயை வளர்த்து வரலானார்.

ரானடே கோலாப்பூர் பள்ளியில் படித்துவிட்டு பம்பாய் எல்பின்ஸ்டன் கல்வி நிலயத்தில் சேர்ந்தார். பிறகு எம்.ஏ., எல்.எல்.பி என்ற பட்டங் கள் பெற்றார். மெட்ரிக் கிலிருந்து அவர் ஒவ் வொரு தேர்விலும் யாவ ருக்கும் முதல்வராகவே மதிப்பெண்கள் பெற்று வந்தார்.

இவர் மேற்கொண்ட மற்றொரு சீர்திருத்தம் விதவை மறுமணம். இவர் பம்பாய் சட்டமன்றத்தின் செயல் உறுப் பினரானதும் விதவைகள் மறுமணம் செய்து கொள்ள ஹிந்து சட்டத்தைத்திருத்தச் செய்தார்.

*1901* ஜனவரி *11*ல் இவர் அமரரானதால் நாடு ஒரு நல்ல பெரும் தலைவரை இழந்தது.

வேதாளம்
சொல்லும்
கதை

# அரசனின் பரிசு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, “மன்னனே...! இந்த பயங்கர நடு நிசியில் இந்த மயானத்தில் பல இன்னல்களை அனுபவித்தும் விடா முயற்சியுடன் ஏதோ ஒரு செயலில் ஈடுபட்டிருப்பதை பார்த்தால் உனக்கு உன் நாட்டிற்குத் திரும்பிப் போகும் உத்தேசம் இல்லை என்று தெரிகிறது. உன் நாட்டின் நிலை இந்த மயானத்தை விட மோசமாக உள்ளதா? நீ உன் நாட்டிற்குப் போய் கஜவீரவர்மன் என்ற மன்னன் செய்தது போல பிரச்சினையைத் தீர்க்க வழி தேடு. உனக்கு அவனது கதையைக் கூறு



கிறேன். கவனமாகக் கேள்!'', என்று சொல்லிக் கதை கூற ஆரம்பித்தது.

ஒரு காலத்தில் கஜவீரபுரம் என்ற நாட்டை கஜவீரவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஆட்சி நன்றாக இருந்தும் சைவர்களுக்கும், வைணவர்களுக்குமிடையே அவ்வப்போது சண்டைகளும், கைகலப்புகளும் நடந்து கொண்டே இருந்தன. இவற்றால் பொருட்சேதமும், உயிர்ச்சேதமும் ஏற்பட்டன. இருதரப்பினரும் ஒருவரையொருவர் தம் கடும் பகைவராக எண்ணி அடிதடியில் ஈடுபட்டு மடங்கள், ஆலயங்கள் என்று கூடப் பாராமல் அவற்றை இடித்துப் போட்டுக் கொண்டே இருந்தார்கள்.

தன் நாட்டில் மக்கள் இரு பிரிவுகளாகப் பிரிந்து வன்முறைகளைக் கையாண்டும் ஒருவரையொருவர் தாக்கி பொருட்சேதம், உயிர்ச்சேதம் என்று ஏற்படுத்திக் கொண்டிருப்பதையும் கண்ட கஜவீரன் தன் அமைச்சரவையைக் கூட்டி நாட்டில் அமைதியை நிலைநாட்ட என்ன வழி என்று கேட்டான். அந்தக் கூட்டத்திலேயே சில அமைச்சர்கள், "சைவர்களே இதற்குக் காரணம்", எனக் கூற மற்ற அமைச்சர்கள் அதை மறுத்து, "வைணவர்கள் தான் வன்முறையில் இறங்கி விட்டார்கள்", என்று கத்தினார்கள். இதனால் வாக்குவாதம் பலத்து ஒரு முடிவும் அக் கூட்டத்தில் எடுக்க முடியாது போயிற்று.

கஜவீரன் அந்தப்புரத்திற்குப் போய் ராணியிடம் எதுவும் பேசாமல் ஏதோ யோசனையில் ஆழ்ந்து விடவே, அது கண்டு ராணி அதன் காரணத்தை ஊகித்துக் கொண்டு, "நீங்கள் சிவ பக்தரா அல்லது விஷ்ணு பக்தரா?", என்று கேட்டாள். மன்னனோ, "நான் இரண்டிலும் ஒருவனல்ல. நான் தேசபக்தன். எனக்கு சிவன், விஷ்ணு என்ற பாகுபாடு கிடையாது", என்றான். அப்போது ராணி, "நம் புராணங்கள் கடவுளைப் பல பெயர்களில் வர்ணித்தாலும் கடவுள் ஒருவரே என்று தான் வலியுறுத்துகின்றன. சிவனும், விஷ்ணுவும் ஒரே கடவுள் தான் என்று காட்ட இருவரையும் சேர்த்து 'ஹரி ஹரர்' என்று கூறி நம் நாட்டில் பல ஹரிஹர ஆலயங்கள் உள்ளன. அவை சரியாகக் கவனிக்கப் படவில்லை. எனவே, நீங்கள் மக்களுக்கு ஹரி ஹரரின் பெருமையை



விளக்க ஏற்பாடு செய்தால் இந்தச் சச்சரவுகளும் சண்டைகளும் நின்று விடும்", என்று யோசனை கூறினாள்.

கஜவீரனும், "இதை சாமான்ய மக்களுக்கு விளக்குவதில் சிரமம் இராது. ஆனால், சிலர் சுயநலம் கொண்டு இந்தச் சச்சரவுகளைக் கிளப்பி விடுகிறார்கள். அவர்கள் இந்த ஒற்றுமைக்கான முயற்சியைத் தடுப்பார்கள். என்னை 'சிவத்துரோகி' என்றோ அல்லது 'வைஷ்ணவத் துரோகி' என்றோ முத்திரை குத்திப் பிரசாரம் செய்வார்கள். அப்போது நான் என்னைக் காத்துக் கொள்ளப் படை பலத்தைப் பயன்படுத்த வேண்டியிருக்கும். இதனால் வீணாக உயிர்ச்சேதம் ஏற்படும். பொது மக்களுக்கு இவ்வாறு தீங்கிழைக்க நான் விரும்பவில்லை", என்றான்.

ராணியும், "மன்னராகப் போய் பிரசாரம் செய்யாமல் 'ஹரிஹரதாசர்' என்ற பெயரில் ஒரு சன்னியாசி வேடத்தில் சென்று பிரசாரம் செய்யலாம்", என்றாள். கஜவீரனும் பலமாகச் சிரித்து, "மன்னனுக்கே சவால் விடும் இந்த சுயநலவாதிகள் ஒரு சாதாரண சன்னியாசியை சும்மா விட்டு வைப்பார்களா?", என்றான். அப்போது ராணி தன் நகைப் பெட்டியிலிருந்து ஒரு மோதிரத்தை எடுத்து வந்து, மன்னனிடம் கொடுத்து, "இது அபூர்வ சக்தி வாய்ந்த மோதிரம். இதை ஒரு முனிவர் எனக்கு அளித்தார். இதை அணிபவரை எந்த ஆயுதத்தாலும், சக்தியாலும் தாக்கி வீழ்த்திவிட முடியாது. ஆனால், இதை ஒருவன் அணிந்து மக்களின் நலனுக்கான செயலைச் செய்யும் போது தான் அவனை இது காக்கும்", என்றாள்.

கஜவீரன் அம்மோதிரத்தைத் தன் கை விரலில் அணிந்ததும், ஒரு சன்னியாசியாக உருமாறி விட்டான். அவன் ராணியைப் பாராட்டிவிட்டு அதே உருவில் மக்களிடையே போய் ஹரிஹர பகவானின் அருமை பெருமைகளை எடுத்துக் கூறலானான். அப்போது சில போக்கிரிகள் அவன் மீது கற்களை எறிந்தனர். அவர்களது தூண்டுதல் பேரில் பொது மக்களில் ஒரு கும்பல் அவனைத் தாக்கி அடித்தது. ஆனாலும், அவை யாவும் பயனற்றுப் போயின. அது கண்டு பாமர மக்கள் அந்த சன்னியாசி அபூர்வ சக்தி வாய்ந்தவர் என நம்பி அவர் கூறியபடி சிவனுக்கும், விஷ்ணுவுக்கும் எவ்வித பேதமும் இல்லை



என்று உணர்ந்தார்கள். இதனால் சைவர்களுக்கும், வைஷ்ணவர்களுக் கும் இடையே நடந்து வந்த சண்டை, சச்சரவுகள் நாளடைவில் குறைந்து முடிவில் இல்லாதும் போயின.

தன் நோக்கம் நிறைவேறியது கண்டு கஜவீரன் மகிழ்ந்து போனான். அதனால், அவன் அரண்மனைக்குத் திரும்பலானான். அப்போது மக்கள் நடமாட்டமில்லாத ஓரிடத்தில் ஒரு வாலிபன் அவன் மீது பாய்ந்து தாக்கினான். கஜவீரன் அவனை இறுகப் பிடித்து, "அடே...! நான் ஹரி ஹரதாசன். அவரது அருளால் அபூர்வ சக்தி பெற்றவன். இதை அறியாமல் நீ என்னைத் தாக்கினாய். ஆயினும், எனக்கு உன் மீது கோபம் இல்லை. அது சரி, நீ எதற்காக என்னைத் தாக்கினாய்?", என்று கேட்டான்.

அந்த வாலிபனும், "நீ ஹரிஹர தாசன் என்பது தெரிந்தே உன்னைத் தாக்கினேன். மந்திரங்களால் மகிமை யான செயல்களைக் காட்டி, மக்களை நல்ல வழியில் கொண்டு செல்ல முடியும். ஆனால், நீ நம் நாட்டில் சச் சரவுகளும், சண்டைகளும் ஏற்படக் காரணமாக இருப்பதை அழித்து விட வில்லை. இவற்றின் மூல காரணம் தெய்வபக்தி. ஒரு நாடு வளமாக இருக்க வேண்டுமானால், அந்நாட்டு மக்கள் மூட நம்பிக்கைகளை விட் டொழித்து நாத்திகர்களாக இருக்க வேண்டும். நீ அந்த தெய்வ பக்தியை மக்களிடையே வளர்த்து வருகிறாய். இதனால் அவர்களது மூடநம்பிக்கை தான் வளர்கிறது", என்றான்.

அதற்கு கஜவீரன், "இவ் வுலகில் பெரும்பாலான மக்கள் ஆஸ்திகர் களே! 'தெய்வபக்தி' என்பது அவர் களின் உயரிய நம்பிக்கை. உலகம் முழுவதிலும் 'தெய்வ பக்தி' என்ற பெயரில் எவ்வளவோ நற் காரியங்கள் நடைபெறுகின்றன. தெய்வ பக்தி மூட பக்தியாக மாறும் போது தான், மனிதன் 'தான் மனிதன்' என்பதை மறந்து விடுகிறான். அந்நிலையில், அவர்களுக்குச் சரியான வழியைக் காட்டுவதே என் நோக்கம். நான் நம்புவதைப் பிரசாரம் செய்வது போல நீயும் நீ நம்புவதைத் தாராள மாகப் பிரசாரம் செய்!", என்றான்.

அப்போது தான் படைத்த ஒரு படைப்பைப் பற்றி அவன் கஜவீர னிடம் கூறவே, அதைக் கேட்ட மன் னன், " மிக உயர்ந்த படைப்பு தான் இது. இதை மன்னனுக்குக் காட்டி



னால் நல்ல பரிசு கிடைக்கும்", என்றான். அதன்பின் இருவரும் பிரிந்து தம் வழியே சென்றனர். மன்னன் அரண்மனைக்குச் சென்றதும், தான் அணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றி ராணியிடம் கொடுத்து விட்டான்.

ஒரு நாள் அவன் தர்பாரில் இருக்கையில், அவன் முன்பு கண்ட நாத்திக இளைஞன் வந்தான். அவன், தன் படைப்பை மன்னனுக்கும், மற்றவர்களுக்கும் படித்துக் காட்டினான். அதைக் கேட்டு, அங்கு கூடி இருந்தவர்கள் அதனைப் பாராட்டும் வகையில், கை தட்டினார்கள். கஜவீரனும், "இளைஞனே...! உன் படைப்பு மிகச் சிறந்தது. அது பத்தாயிரம் வராகன்கள் பரிசைப் பெறும் தகுதி பெற்றது", என்றான்.

அப்போது அமைச்சர்கள் குறுக்கிட்டு, "அரசே! இப்படைப்பு சிறந்தது என்றாலும் இதில் கடவுளை நிந்திக்கும் சில பகுதிகள் உள்ளன. அது நம் நாட்டு ஆஸ்திகர்களின் மனதைப் புண்படுத்தும். எனவே, இதற்கு அரசாங்கப் பரிசு அளிக்கக் கூடாது", என்றார்கள். கஜவீரனும், அமைச்சர்கள் கூறியது சரியே எனக் காட்ட தலையை அசைத்து விட்டு, அந்த வாலிபனிடம் தன்னைத் தனிமையில் சந்திக்குமாறு கூறினான். அந்த வாலிபனும் தர்பாரிலிருந்தவர்கள் கலைந்து சென்றபின், மன்னனைத் தனிமையில் சந்தித்தான். அப்போது கஜவீரன், "உன் படைப்பு மிகச் சிறந்தது. உன் கொள்கைகளையும், எண்ணங்களையும் நீ மக்களிடையே பரப்ப உறுதி கொண்டால், உனக்கு ஹரிஹர பகவானின் அரிய சக்தி கிடைக்கும்படிச் செய்கிறேன்.



அச் சக்தியால் நீ சுயநலனை அடைய முடியாது. பொது மக்களின் நலனுக் காக மட்டும் அதனைப் பயன்படுத்த முடியும்", என்றான்.

அது கேட்டு, அந்த இளைஞன் வேண்டாம் எனக் கூறுவது போலத் தலையை ஆட்டி, "எல்லோருமே யோகிகளாகி விட முடியாது. மக்க ளுக்கு நான் நன்மை செய்வதால் எனக்கு என்ன லாபம்? தெய்வ பக்தியை அனுமதிக்கும் இந்நாட் டில், என் படைப்புகளுக்கு ஆதரவு கிடைக்காது. நான் என் தாய், தந்தையர் களைக் காக்க வேண்டும். என் சகோ தரிகளுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும். அதன் பின், நானும் விவாகம் செய்து கொண்டு சுகமாக வாழ வேண்டும். எனக்கு அரசாங்க ஆதரவு இருந்தாலே இது போன்ற படைப்புகளை நாட்டிற்கு அளிக்க முடியும். எனவே, இனி இம்மாதிரி எழுதுவதை விட்டு விட்டு, உழைத்துச் சம்பாதித்துத் தான் என் குடும்பத்தைக் காத்து முன்னுக் குக் கொண்டு வர முடியும்", என்றான்.

அப்போது கஜவீரன், ஓர் ஓவியத்தை அவனிடம் கொடுத்து, "இந்தப் படத்தை இந்நகரிலுள்ள முத்துமாணிக்கம் என்ற நகை வியா பாரியிடம் கொடுத்தால், அவன் உனக் குப் பத்தாயிரம் வராகன்கள் கொடுப் பான். அதை வாங்கிக் கொண்டு, இன்னொரு காவியம் எழுதிக் கொண்டு என்னிடம் வா. அதற்குள் இன்னொரு ஓவியத்தை நான் தீட்டி வைத்திருக்கிறேன்." என்றான்.

அதைக் கேட்ட இளைஞன் மிகவும் ஆச்சரியப்பட்டு, "அரசே! நீங்கள் வரைந்த ஓவியங்களை விற்று எனக்கு ஏன் பணத்தைக் கொடுக் கிறீர்கள்?", என்று கேட்டான்.

கஜவீரனும், "உன் படைப்பு எனக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. என் ஒழிந்த வேளையில் என் உழைப்பால் நான் சம்பாதித்த பணத்தை உனக்குப் பரிசாக அளிக் கிறேன். முத்து மாணிக்கம் நல்ல கலாரசிகன். அவனுக்கு இம்மாதிரி ஓவியங்கள் மிகவும் பிடிக்கும்", என்று கூறினான்.

அப்போது அந்த இளைஞன் கைகூப்பி, "தாங்கள் உயரியக் குறிக்கோளுடன் இருப்பீர்கள் என்று என்னால் நினைக்கக் கூட முடிய

வில்லை. நாத்திகனான நான் உங்களுள் கடவுளையே பார்க்கிறேன் . உங்களையே என் வழி காட்டியாகக் கொண்டு நான் என் உழைப்பால் என் குடும்பத்தைக் காத்து இலக்கியப் படைப்புகளையும் உருவாக்கி வருவேன்", என்றான்.

கஜவீரனும் இளைஞனின் முதுகில் தட்டி, "மக்கள் மூடநம்பிக்கைகளில் ஒரேயடியாக மூழ்கிப் போகாமல் இருக்க உன் போன்றவர்களின் படைப்புகளும் மிகமிக அவசியம். நீ என்னுள் கடவுளைக் கண்டது போல. ஒவ்வொரு மனிதனுள்ளும் கடவுளைக் கண்டால். உன் படைப்புகளால் உலகிற்கு நன்மையே ஏற்படும். உன் போன்றவர்களுக்கு நான் பரிசளிக்கவே வேண்டும்", என்று மீண்டும் ஒரு முறை கூறினான்.

வேதாளம் இக்கதையைக் கூறி, "மன்னனே! நாட்டில் அபிப்பிராய பேதங்களும், ஆஸ்திக-நாத்திக வாதங்களும் நிலவ சச்சரவுகளையும், சண்டைகளையும் அடக்க ஒரு மன்னன் படைவீரர்களைப் பயன்படுத்துவதைக் காண்கிறோம். ஆனால், கஜவீரன் அவ்வாறு செய்யாமல் மக்களுக்கு நீதிகள் புகட்டி நாட்டில் அமைதியை நிலை நாட்டினானே! இது சரியான முறை தானா? இந்த அமைதி நிலைக்குமா? இக்கேள்விகளுக்குச் சரியான விடைகளை அறிந்திருந்தும் நீ கூறாவிட்டால், உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்", என்றது.

விக்கிரமனும், "உலகம் ஒரே நிலையில் இராது. அவ்வப்போது மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டே யிருக்கும். எனவே, மன்னன் அவ்வப் போதுள்ள நிலைமைகளுக்கேற்ப, தன் ஆட்சி முறைகளையும் மாற்றிக் கொண்டாக வேண்டும். படை பலத்தை எதற்கெடுத்தாலும் பயன்படுத்துவது சரியல்ல. மேலும், சண்டை சச்சரவுகளில் நிரந்தர அமைதி என்பது ஏற்படுவது அரிதே!", என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய், மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.





# மனதில் உறுதி வேண்டும்

அரசலூரில் அருணாசலம் என்ற வியாபாரி இருந்தான். அவனுக்கு ஆண் குழந்தை பிறந்த போது, அதன் ஜாதகத்தை கணித்த சோதிடர், "இவனது ஜாதகம், அதிர்ஷ்ட ஜாதகம். இவன் பிறந்த வேளை, உங்களுக்குக் கோடி கோடியாகப் பணத்தைக் குவிக்கும். அதனால் இவனுக்கு 'கோடீஸ்வரன்' என்று பெயர் வையுங்கள்", என்றார். அருணாசலமும் தன் மகனுக்கு அதே பெயர் வைத்தான். அப்போது முதல் அவன் வியாபாரமும் நன்கு நடக்கவே நிறைய லாபம் கிடைத்தது. அவனும் பிரபல வியாபாரி ஆகி விட்டான்.

கோடீஸ்வரனுக்கு வயது பதினாறு ஆனபோது, அவனது தாயார் திடீ ரென மாரடைப்பால் இறந்தாள். அருணாசலம் சரக்குகளுடன் அயல்நாட்டிற்கு அனுப்பிய கப்பல்கள் முழுகிப் போயின. உள்நாட்டில் அவன் சில ஊர்களுக்கு அனுப்பிய சரக்குகள் வழியில் கொள்ளை போயின. இதனால், அருணாசலம் தன் செல்வம் முழுவதும் இழந்து, மன நோய்வாய்ப் பட்டு படுத்த படுக்கையாய்க் கிடந்தான்.

தான் இனிப் பிழைக்கப் போவதில்லை என்று அறிந்து கொண்ட அருணாசலம் தன் மகன் கோடீஸ்வரனைத் தன்னருகே அழைத்து, "மகனே...! நீ பிறந்த வேளை அதிர்ஷ்டம் தருவது என்றதால் உனக்குக் 'கோடீஸ்வரன்' என்று பெயர் வைத்தேன். போன வருடம் வரை, லாபத்திற்கு மேல் லாபமாகக் கிடைத்தது. ஆனால், இந்த ஒரே வருடத்தில் என் பணம் எல்லாம் போய் ஓட்டாண்டி ஆகிவிட்டேன். இனி, உன் எதிர்காலம் எப்படி இருக்குமோ என்று

- சிவனார் செல்வன்

தான் கவலைப்படுகிறேன்" என்றான்.

கோடீஸ்வரனும் தந்தைக்கு ஆறுதல் கூறி, "பணம் எப்போதும் ஒரே இடத்தில் நிலைத்து நிற்காது. அது உருண்டு ஓடும். வியாபாரத்தில் நஷ்டத்தைத் தாங்கிக் கொண்டு வியாபாரமே செய்ய வேண்டும். வியாபாரத்தில் முன்னேறி நல்ல லாபம் நான் பெற வேண்டுமென்று என்னை ஆசீர்வதியுங்கள்!", என்றான்.

அருணாசலமும், "உன் மன உறுதியைப் பாராட்டுகிறேன். இதற்காக எதையும் செய்யலாம். என் வாழ்க்கையை நான், துறைமுகத்தில் கப்பல்களில் வரும் சரக்குகளுக்கு சுங்கவரி வசூலிப்பவனாகத்தான் ஆரம்பித்தேன். வியாபாரியான என் நண்பன் வைரவன் என்பவனைப் போய்ப் பார். அவன் உனக்கு அந்த வேலையை வாங்கிக் கொடுப்பான். அதைச் செய்தவாறே நீ முன்னுக்கு வரலாம்", என்று கூறினான்.

அருணாசலம் இறந்த பின், கோடீஸ்வரன் வைரவனைப் போய்ப் பார்த்தான்.

தான் அருணாசலத்தின் மகன் என்று கோடீஸ்வரன் கூறியதும், வைரவன் மகிழ்ந்து, "உன் தந்தை என் ஆருயிர் நண்பன். உனக்கு இந்த சுங்கவரி வசூல் வேலை வேண்டாம். கொஞ்சம் பணம் கொடுக்கிறேன். அதை முதலாக வைத்துக் கொண்டு வியாபாரத்தை ஆரம்பி", என்றான். கோடீஸ்வரனும், "நீங்கள் பணம் கொடுப்பதாகக் கூறியதற்கு மிக்க நன்றி. ஆனால், நான் என் தந்தை



சொன்ன வழியிலேயே செல்ல விரும்புகிறேன். அதனால், என் தந்தை தம் வாழ்க்கையை ஆரம்பித்தது போல சுங்க வரி வசூலிப்பவனாகவே தொடங்கி, அவரைப் போல வியாபாரியாக விரும்புகிறேன்", என்றான்.

வைரவனும், "பேஷ்...! இப்படிப்பட்ட மன உறுதி தான் ஒருவனுக்கு வேண்டும். உன் விருப்பப்படியே உன்னைச் சுங்க வரி வசூலிப்பவனாக நியமிக்கிறேன். நீயும், உன் தந்தையைப் போல உயர்ந்து, பெரிய வியாபாரியாக என் நல்லாசிகளையும் அளிக்கிறேன்", எனக்கூறி அவனை அந்த வேலையில் அமர்த்தினான்.

ஒரு நாள் ஒருவன் மூன்று பெட்டிகளுடன் துறைமுகத்தில் இறங்கினான். கோடீஸ்வரனும், "இப்பெட்டிகளில் என்ன இருக்கிறது? அவற்றிற்கு சுங்க வரி செலுத்த வேண்டும்",



என்றான். அவனோ, "பெட்டிகளில் ஒன்றும் இல்லை", என்று கூறினான். அதற்கு கோடீஸ்வரன், "இருந்தாலும் வெளி நாட்டிலிருந்து இத்துறை முகத்திற்கு மூன்று பெட்டிகளைக் கொண்டு வந்திருக்கிறாய். எனவே, இப்பெட்டிகளுக்கு வரி கொடுத்தே ஆக வேண்டும்", என்றான்.

அப்போது, "ஐயா! நான் பரம ஏழை. நான் அயல்நாட்டில் வியாபாரிகளின் கூட்டத்தில் சாதாரண வேலைக்காரனாகப் பணிபுரிந்து கொண்டிருந்தேன். அந்த வியாபாரிகளின் கூட்டம் ஒரு காட்டில் சென்று கொண்டிருந்த போது, ஒரு கொள்ளையர் கூட்டம் எல்லோரையும் தாக்கிப் பொருள்களை எடுத்துக் கொண்டு, போய் விட்டது. வியாபாரிகள் உயிர் தப்பி ஓடி விட்டார்கள். எனக்குப் பலமாக அடி விழுந்ததால் நினைவு இழந்து விழுந்து விட்டேன். நான் கண் விழித்துப் பார்த்தபோது, இந்த மூன்று காலிப் பெட்டிகள் அங்கே இருந்தன. அவை அரசலூரைச் சேர்ந்த அருணாசலம் என்ற பெரும் வியாபாரியினுடையவை என்பது எனக்குத் தெரியும். அதனால், இவற்றை அந்த வியாபாரியிடம் ஒப்படைத்து விட்டு, அவரிடமே வேலை கேட்டு பணி புரியவே இப்போது சென்று கொண்டிருக்கிறேன்", என்றான்.

அவை தன் தந்தையின் பெட்டிகள் என்று கோடீஸ்வரன் அறிந்து மகிழ்ச்சி அடைந்த போதிலும், வரி வசூலிப்பது பற்றி என்ன செய்வது என்று வைரவனிடமே கேட்பது என்று தீர்மானித்தான். அதனால், அவன் அந்த மனிதனுடன் பெட்டிகளையும் கொண்டு போய், வைரவனிடம் விஷயத்தைக் கூறி, "இந்தப் பெட்டிகள் என் தந்தையினுடையவை என்று இந்த மனிதன் கூறிய போதும், உங்களிடம் கூறாமல் எதுவும் செய்யக் கூடாது என்பதற்காகவே இவனை இப்பெட்டிகளோடு இங்கு அழைத்து வந்தேன்",என்றான்.

வைரவனும், "நீ செய்தது சரியே! இவன் காட்டில் கிடைத்த காலிப் பெட்டிகளைக் கொண்டு வந்திருப்பதால் இவற்றிற்கு சுங்க வரி வசூலிக்கத் தேவையில்லை. மேலும், இவனே இவை உன் தந்தையின் பெட்டிகள் என்று கூறுவதால், இப்பெட்டிகளை நீயே எடுத்துக் கொள்ளலாம்" என்றான். பிறகு அவன் ஏதோ நினைத்துக்கொண்டு அப்பெட்டியை உன்

னிப்பாகப் பார்த்தான். அவன் முகம் மலர்ந்தது.

அவன் கோடீஸ்வரனிடம், "உன் தந்தை தங்கமுலாம் பூசிய நகைகளையும், பொருள்களையும் விற்று வந்தது எனக்குத் தெரியும். அவ்விதப் பொருள்களோடு, தங்க வியாபாரமும் செய்து வந்தார் என்று கேள்விப் பட்டிருந்தேன். அதனால், அவர் இப் பெட்டிகளின் பலகைகளுக்கிடையில் தங்கத் தகடுகளை மறைத்து வைத்து அயல்நாட்டில் ஒரு குறிப் பிட்ட வியாபாரிக்கு அனுப்பி இருக்கிறார். அந்த வியாபாரிக்கு மட்டுமே இப்பெட்டிகளில் தங்கத் தகடுகள் மறைத்து வைத்திருக்கப் பட்டிருப்பது தெரியும். கொள்ளைக்காரர்கள் வியாபாரிகளைத் தாக்கிக் கொள்ளை அடித்த போது, இப்பெட்டிகளிலிருந்த தங்க முலாம் பூசிய நகைகளையும், பொருள்களையும் உண்மையான தங்கப் பொருள்கள் என்று எண்ணி, அவற்றை மட்டும் எடுத்துக் கொண்டு, பெட்டிகளை விட்டு விட்டுப் போய் விட்டார்கள்", என்று கூறி அப்பெட்டிகளின் அடிப்பலகைகளைப் பெயர்த்துப் பார்த்தான். அவன் நினைத்தபடி மூன்று பெட்டிகளின் அடிப்பகுதிகளிலும் தங்கத் தகடுகள் மறைத்து வைக்கப்பட்டு இருந்தன.

வைரவன் அவற்றை கோடீஸ்வரனிடம் கொடுத்து, "இவற்றை விற்று அந்தப் பணத்தைக் கொண்டு, நீ வியாபாரத்தைத் தொடங்கு! இந்த நேர்மையான மனிதனை வேலைக்கு வைத்துக் கொள்", என்றார்.

கோடீஸ்வரனும், வைரவன் கூறிய படியே தங்கத் தகடுகளை விற்றுப் பணமாக்கி, அதை மூல தனமாகக் கொண்டு வியாபாரத்தை ஆரம்பித்தான். அவனது வியாபாரமும் நன்கு நடக்கவே, இரண்டு மூன்று ஆண்டுகளில் பெரிய வியாபாரியாகி விட்டான். அதைக் கண்ட வைரவன் மகிழ்ந்து தன் மகளையே அவனுக்குத் திருமணம் செய்து வைத்தான். கோடீஸ்வரனின் மன உறுதி தான் அவனை முன்னுக்குக் கொண்டு வந்தது.



**ஒரு நாகரீகத்தின் உயரிய கட்டடங்கள், பரம்பரை பரம்பரையாக, உண்மையைக் காண ஆய்வு**



# 11. சாவித்திரியின் துணிகரச் செயல்



அன்று ஞாயிற்றுக்கிழமை. அன்றையப் பொழுதை எப்படிக் கழிப்பது என்று சோமநாதர் யோசித்துக் கொண்டிருந்த போது தொலைபேசியின் மணி அடித்தது. அவர் ரிசீவரை எடுத்ததும், "அது சேகரின் வீடு தானே! நான் சேகரின் தாத்தாவுடன் பேச விரும்புகிறேன்", என்று கேட்கவே சோமநாதரும், "சோமநாதன் தான் பேசுகிறேன்", எனவே மறுமுனையிலிருந்து, "வணக்கம் தாத்தா! நானும், என் நண்பர்களும் நீங்கள் கதை சொல்வதைக் கேட்க விரும்புகிறோம். சத்தியவான்-சாவித்திரி கதை கூறுவதாக சென்ற முறை கூறினீர்களே. அதை இன்று மாலை கூறுவீர்களா?", என்று கேட்டான்.

சோமநாதரும், "ஓ...! தாராளமாக. புராணக் கதைகளைக் கேட்பதில் நீங்களெல்லாம் இப்படி ஆர்வம் காட்டுவது எனக்கு மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது. இன்று மாலை எல்லோரும் வழக்கமாக நாம் கூடும் மரத்தடியே வந்து இருங்கள். நானும் அப்போது அங்கு வந்து கதை சொல்கிறேன்", என்றார். சிறுவர், சிறுமியரும் குறிப்பிட்ட நேரத்தில் வழக்கமாகக் கூடும் மரத்தடியே கதை கேட்கக் கூடிவிட்டார்கள். சோமநாதரும் வந்து அவர்களுக்கு சத்தியவான் - சாவித்திரியின் கதையைக் கூறலானார்:-

மத்திர தேச மன்னன் அசுவபதி திருமணமாகி சில வருடங்களாகியும் தனக்கு மக்கட்பேறு இல்லாததால் தன் குல தெய்வமான சாவித்திரி தேவியை அவன் வழிபட்டான். அத்தேவியின் அருளால் அவனுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்கு அவன் 'சாவித்திரி' எனப் பெயரிட்டு

# பாடு - வரலாறு





அருமை பெருமையாக வளர்த்தான். திருமண வயது வந்ததும், அவள் தானேதனக்குகணவராகவரப்போகிற வரைத் தேர்ந்தெடுப்பதாகக் கூறி சால்வ மன்னனின் மகனான சத்திய வானைத் தேர்ந்தெடுத்தாள்.

சத்தியவான் நாட்டில் இல்லாத போது, எதிரிகள் அவனது தந்தையான சால்வ மன்னனை நாட்டை விட்டு விரட்டி, அவனது கண்களையும், அவ னது மனைவியின் கண்களையும் பிடுங்கி விட்டு, காட்டிற்கு விரட்டி விட்டார்கள். அவர்கள் அங்கே வாழ்ந்து வர, நாடு திரும்பிய சத்திய வானும் சால்வ நாட்டிற்கு ஏற்பட்ட கதியைக் கண்டு, காட்டிற்குப் போய் தன் தாய், தந்தையருடன் இருந்து அவர்களுக்குப் பணிவிடை செய்து வரலானான்.

சாவித்திரி தான் சால்வ மன்னனின் மகன் சத்தியவானை மணக்க விரும்பு வதாகத் தன் தந்தையிடம் கூறவே, அசுவபதியும், "அவன் தன் நாட்டை இழந்து காட்டில் இருக்கிறானே...! அவனை மணந்தால் நீ கஷ்டப்பட வேண்டும். அதனால், வேறு எந்த அரசகுமாரனையாவது மணந்து கொள்", என்றான். சாவித்திரியோ, தான் சத்தியவானையே மணக்க எண்ணி விட்டதால், வேறு யாரையும் கணவனாக ஏற்க முடியாது என்று உறுதியாகக் கூறிவிட்டாள். அப் போது நாரத முனிவர் அங்கு வரவே, அசுவபதி தன் மகளின் பிடிவா தத்தைக் கூறினான்.

அதுகேட்டு நாரதரும், "அசுவபதி! நீ சாவித்திரியை சத்தியவானுக்கே மணம் செய்து வை. எல்லாம் நல்ல படியே முடியும்", என்று கூறினார். பின்னர் அவர் சாவித்திரியைத் தனியே அழைத்துப் போய், "சாவித்திரி! சத் தியவானுக்கு இன்றிலிருந்து சரியாக பன்னிரெண்டாவது மாத முடிவில் மரணம் ஏற்படும். அந்த நாளை நினைவில் வைத்துக் கொண்டு அன்று அவனை விட்டு ஒரு கணமும் பிரியா மல் இரு! அன்று எமதர்மன் அவனது உயிரைக் கவர வருவான். அவனோடு பேசி அவனது உயிரை மீட்டு வா! இன்று முதல் தினமும் நீ உன் குல தெய்வமான சாவித்திரி தேவியையும் பக்தி சிரத்தையுடன் வழிபட்டுக்



கொண்டே வா!'', என்று கூறி அவளை ஆசீர்வதித்து விட்டுச் சென்றார்.

நாரத முனிவர் கூறியபடி அசுவபதி தன் மகள் சாவித்திரியை சால்வ மன்னனின் மகன் சத்தியவானுக்கே மணமுடித்து வைத்தான். சாவித்திரி யும் தன் கணவனுடன் வாழக் காட்டிற்குச் சென்றாள். அங்கு அவள் தினமும் பக்தி சிரத்தையுடன் சாவித்திரி தேவியை வழிபட்டு வந்ததோடு, தன் கணவனுக்கும், மாமனாருக்கும், மாமியாருக்கும் பணிவிடைகள் செய்து வந்தாள். அவளுக்கு நாரதர் குறிப்பிட்ட நாள் நன்கு நினைவில் இருந்தது.

வழக்கம் போல சத்தியவான் அன்று காட்டிற்குக் கிளம்பிய போது, சாவித்திரி தானும் அவனோடு வருவ தாகக் கூறி, அவனோடு காட்டிற்குச் சென்றாள். சத்தியவான் ஒரு மரத்தில் விறகு வெட்டிக் கொண்டிருக்கை யில் சாவித்திரியிடம் தனக்குத் தலை சுற்றுவதாகக் கூறவே, அவள் அவனை ஓரிடத்தில் படுக்க வைத்து அவனது தலையைத் தன் மடி மீது வைத்துக் கொண்டாள். நாரதர் கூறிய படி இன்னும் சற்று நேரத்தில் எமதர் மன் வருவான் என்று அவள் விழிப் புடன் இருக்கலானாள். சற்று நேரத் தில் எமதர்மன் வருவதை அவள் கண் டாள். அவன் வந்து தன் பாசக் கயிறை வீசி சத்தியவானின் உயிரைக் கவர்ந்து கொண்டு செல்லவே, சாவித்திரி தன் கணவனின் உடலை இலைகளால் மூடி விட்டு, எமதர்மனைப் பின் தொடர்ந்து சென்றாள்.

தன் பின்னால் ஒரு பெண் தொடர்ந்து வருவதைக் கண்ட எமதர்மன், "பெண்ணே...! எந்த மானி டப் பிறவியாலும் என்னைப் பார்க்க முடியாதே...! நீ என்னைப் பார்த்துப் பின் தொடர்ந்து வருகிறாய் என்றால் உன்னிடம் ஏதோ அதிசய சக்தி உள்ளது தெரிகிறது. உனக்கு என்ன வேண்டும்? உன் கணவனின் உயிரைத் தவிர வேறு எதை வேண்டுமானாலும் கேள். கொடுக்கிறேன். நீ மூன்று வரங்களைக் கேட்டுப் பெறலாம்'', என்றான்.

சாவித்திரியும், "என் மாமனாரும், என் மாமியாரும் தாம் இழந்த கண் களைப் பெற்று பார்வையை அடைய வேண்டும். இது நான் கேட்கும் முத லாவது வரம்'', எனவே எமதர்மனும், "அப்படியே நடக்கும்'', என்றான். அடுத்த வரமாக சாவித்திரி, "என்

டிசம்பர் 2000 இதழில் வெளியான 'கோபு வளர்த்த நாய்க்குட்டி' கதையை எழுதியவர் டி.ஆர். இராஜேஸ்வரி மோகன்.

மாமனார் தாம் இழந்த நாட்டை மீண்டும் பெற வேண்டும்", என்றாள். எமதர்மனும், "அதுவும் நடக்கும்", என்றான். பிறகு சாவித்திரி மூன்றாவது வரமாக, "நான் பதிவிரதையாக, சுமங்கலியாக வாழ்ந்து குழந்தைகளைப் பெற வேண்டும்", எனக் கேட்டாள். எமதர்மனும் சற்றும் யோசிக்காமல், "அப்படியே நடக்கும்", எனக் கூறிவிட்டு முன்னே செல்லலானான்.

சாவித்திரி அவனைப் பின் தொடரவே எமதர்மன், "இன்னமும் ஏன் என் பின்னால் வருகிறாய்? நீ கேட்ட வரங்களைக் கொடுத்து விட்டேனே...!", எனவே சாவித்திரியும், "நான் சுமங்கலியாகவும், பதிவிரதையாகவும் இருந்து குழந்தைகளைப் பெற வேண்டும் என்றால் என் கணவர் என்னுடன் இருக்கத்தானே வேண்டும்?", என்றாள். அது கேட்டு எமதர்மன், "ஆ..! முடிவில் நீ என்னை வென்று விட்டாய். வா...! உன் கணவனை உயிர்ப்பிக்கிறேன்", எனக் கூறி அவளோடு சத்தியவான் உடல் கிடந்த இடத்திற்கு வந்து அவனை உயிர்ப்பித்து விட்டுச் சென்றான். சாவித்திரி சத்தியவானுடன் திரும்பி வந்தாள். அப்போது சால்வ மன்னனுக்கும், அவனது மனைவிக்கும் பார்வை கிடைத்திருந்தது. அது மட்டுமல்ல. சால்வ நாட்டு மக்கள் எதிரிகளை விரட்டிவிட்டு, சால்வ மன்னனையும், அவனது மனைவியையும், சத்தியவானையும் தலைநகருக்கு வந்து ஆட்சிப் பொறுப்பை மீண்டும் ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார்கள். அவர்களும் தலைநகருக்குச் சென்று சுகமாக வாழ்ந்தனர்.

சாவித்திரியின் பக்தி சிரத்தையாலும், மன உறுதியாலும், துணிச்சலாலும் அவளால் எமனுடன் வாதாடித் தன் கணவன் உயிரை மீட்டு, சுக வாழ்வு வாழ முடிந்தது. இவ்வாறு, சோமநாதர் சத்தியவான்-சாவித்திரி கதையைக் கூறி முடிக்கவே சிறுவர்-சிறுமியர் யாவரும், "பேஷ்! கதை மிக நன்றாக உள்ளது", என்று கூறிக் கை தட்டினார்கள்.





# சிங்காரத்தின் சித்திரம்

சிங்காரம் ஒரு சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவன். அவன் பெரும் பணக்காரனாகிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டான். இதனால் இரவு-பகல் என்று பாராமல் உழைத்துப் பணம் சேர்க்கலானான். அவனிடம் கெட்ட பழக்கம் எதுவும் இல்லை. வீண் செலவு செய்பவனும் அல்ல. கட்டுப்பாடான வாழ்க்கை நடத்துபவன். சில வருடங்களில், வியாபாரம் செய்வதற்கு முதல் போட போதிய பணம் சேர்ந்து விடவே முதலில் சிறிய அளவில் வியாபாரத்தை ஆரம்பித்தான். பத்தாண்டுகளில் நிறையப் பணம் சம்பாதித்து, பல லட்சங்களுக்கு அதிபதியாகவும் அவன் ஆகிவிட்டான்.

அவனுக்கு இரு மகன்களும், ஒரு மகளும் இருந்தனர். அவர்களுக்கு அவன் திருமணம் செய்து வைத்து, பேரன்-பேத்திகளையும் கண்டு விட்டான். அவனது மகன்கள் வியாபாரத்தைக் கவனித்து வந்தனர். அவனுக்கும் ஐம்பது வயதிற்கு மேலாகிவிட்டதால், தொழிலிலிருந்து ஓய்வு பெற்று இருக்கலானான். ஆனால், எப்போதும் ஏதாவது ஒரு வேலையைச் செய்து கொண்டிருந்த அவனால் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை.

கதை, கவிதை, கட்டுரை எழுதலாமென்றால் அவன் அதிகம் படிக்கவில்லை. இசையில் தேர்ச்சி பெறலாம் என்றாலோ, அதற்கேற்ற குரல்வளம் அவனிடம் இல்லை. முடிவில், சித்திரக் கலையில் பொழுதைப் போக்குவது என எண்ணித் தனியாகத் தன் அறையில் இருந்து சித்திரம் வரைந்து பார்க்கலானான். இரண்டொரு காகிதங்களில்

சிந்துஜா சங்கர்

ஏதேதோ வரைந்துவிட்டு, முடிவில் மூன்றாவது காகிதத்தில் ஏதோ வரைந்தபின் அவன், "ஆகா...! நான் வரைந்த சிங்கத்தின் படம் எவ்வளவு நன்றாக இருக்கிறது...!", என்று எண்ணி அகமகிழ்ந்தான்.

தான் வரைந்த சித்திரத்தை மற்றவர்களும் பாராட்டினால் தானே தான் கற்ற சித்திரக் கலைக்கு மதிப்பு, என அவன் எண்ணினான். இதை ஒவ்வொருவரிடமும் காட்டிப் பாராட்டு பெறுவதை விடத் தன் வீட்டில் யாவரும் பார்க்கும்படியாக அக்காகிதத்தைத் தொங்கவிட்டு, யார்-யார் எப்படியெல்லாம் பாராட்டு கிறார்கள் என்று கேட்க நினைத்தான்.

அதனால், வீட்டின் ஹாலில் சற்று உயரமான இடத்தில், எல்லோரும் பார்க்கும்படியாக வைத்து, அதனடி யில் 'இது என்ன என்று சொல்பவர் களுக்கு நூறு ரூபாய் பரிசு!', என்று அவன் எழுதி வைத்தான். இப்படி அவன் செய்தது யாரும் அந்தப் பக்கம் வராமல் இருந்த போது தான்.

சற்று நேரமானதும், சிங்காரத்தின் மனைவி ஹாலுக்குள் வந்து, சிங்காரம் வைத்திருந்த காகிதத்தைப் பார்த்தாள். அவள் உரத்த குரலில், "இது என் பேரன் கிறுக்கி வைத்த காகிதமா ?", என்று சிரித்தவாறே கூவினாள். அது கேட்டு சிங்காரத்தின் இரு மகன் களும், "யாரோ கிறுக்குப் பயல் கிழித்த கோடுகளைப் பற்றி நினைத்து, மண்டையை ஏன் உடைத்துக் கொள்ள வேண்டும்? பேசாமல் வியா பாரத்தைக் கவனிக்கக் கடைக்குப் போவோம்", என்று கூறிக்கொண்டே போய் விட்டார்கள்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த சிங்காரம், "இவர்களுக்கு கலையை ரசிக்கவே தெரியவில்லை!", என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டான்.



இச்சமயத்தில் அவனது இரு மரு மகள்களும் அங்கு வந்தனர். அவர்கள், "யாரோ இப்படி ஒரு ரகசியச் செய்தியை, இங்கு யாருக்கோ அனுப்பி இருக்கிறார்கள் போலிருக் கிறது. இதில் என்ன செய்தி உள்ளது என்று நமக்குப் புரியவில்லை!", என்று கூறியவாறே சென்றார்கள். சிங்காரமோ, "உங்களுக்கு இந்த நூறு ரூபாய் பரிசு கிடைக்காது போலிருக் கிறது!", என உரக்கக் கூறிச் சிரித்தான்.

இதன் பிறகு, இரு வேலைக்காரர் கள் அந்த ஹாலுக்குள் வந்தார்கள். அவர்களில் ஒருவன், "இது என்ன? பல வகைப்பட்ட விதைகளை வைத்து மடித்துக் கட்டி எடுத்து வந்த பொட்டலக் காகிதம் போல இருக் கிறதே!", என்றான். அதற்கு மற்ற வேலையாள், "உளராதே...! விதை களைக் கட்டிப் பொட்டலமாக எடுத்து வந்திருந்தால் காகிதத்தில் பல மடிப்புகள் இருக்க வேண்டுமே! அப்படி இல்லையே...! அதனால் இக் காகிதத்தின் மீது அழுகிய விதைகளை வைத்திருக்கிறார்கள். அவற்றின் சாறு கசிந்து இப்படி வண்ணக் கோடு களாகி விட்டன", என்று கூறினான். அதுகேட்டு மற்றவன், "நீ சொல்வது போலவும் இருக்கலாம்", எனவே இருவரும் அங்கிருந்து சென்றனர்.

சற்று நேரத்தில் சிங்காரத்தின் பேரன் வந்தான். அவன் அக்காகி தத்தைப் பார்த்து, "இது எதனுடைய படம்? ஒன்றும் புரியவில்லையே...", என்றான். சிங்காரமும் அவனைப் பாராட்டி, "இந்த சிங்கப் படத்தை நீ ஒருவன் தான் 'படம்' என்று சொன் னாய். சிங்கத்தின் சித்திரம் என்று முழுமையாக நீ கூறாவிட்டாலும் படம் என்று சொன்னதால் உனக்கே நூறு ரூபாய் பரிசு!", என்றான். பரிசு அறிவிக்கப்பட்டதைக் கேட்டு, சிங்கா ரத்தின் மனைவியும், மருமகள்களும், வேலையாட்களும் ஓடி வந்தார்கள்.

சிங்காரம் அதனை 'சிங்கத்தின் சித்திரம்' என்று கூறியதைக் கேட்ட அவர்கள், "ஓ...! இது நீங்கள் வரைந்த சித்திரமா? அதுதான் இப்படி இருக் கிறது", என்று கூறி விழுந்து. விழுந்து சிரித்தார்கள்.



# இருபதாம் நூற்றாண்டில் இந்தியா

## சுதந்திரத்தை நோக்கிப் பீடுநடை-1901-1921

அண்மையில் தான் நம் பத்திரிகை இந்திய சுதந்திரத்தின் பொன்விழாவின் போது, சுதந்திரப்போராட்ட வீராங்கனை ஜான்சிராணி லக்ஷ்மி பாயையும், மற்றவர்களைப் பற்றியும் மெய்சிலிர்க்க வைக்கும் சம்பவங்களை உங்களுக்கு அளித்தது. 1857 முதலாவது சுதந்திரப்போராட்டத்தில் அவர்கள் தம் தாய் நாட்டிற்காக எவ்வாறு தம் உயிரையே தியாகம் செய்தார்கள் என்று எடுத்துரைக்கப்பட்டது. இதற்குப்பின் மக்களின் சுதந்திரத்திற்கான உணர்ச்சிகளை ஒன்று திரட்ட இருபத்தைந்து ஆண்டுகள் வரை எந்த இயக்கமும் இருக்கவில்லை.

அதிசயிக்கத்தக்க விதமாய் நம் நாட்டு மக்கள் ஒரு அமைப்பின் கீழ் தம் எதிர்காலம் பற்றி விவாதித்துத்தீர்மானிக்க ஆங்கிலஅரசாங்கத்தின் முன்னாள் அதிகாரி ஏ.ஓ. ஹ்யூம் என்பவர் அடித்தளம் அமைத்தார். இவ்வாறு நாட்டின் சுதந்திரப்பிரச்சினையை 1885ல் ஆரம்பிக்கப்பட்ட இந்திய தேசிய காங்கிரஸ் மேற்கொண்டது. இந்த எண்ணத்திற்கு உருவளித்தவர்கள் பால கங்காதர திலகர், கோபால கிருஷ்ண கோகலே, லாலா லஜ்பத்ராய், பிபின் சந்திரபால் ஆகியோர் ஆவர்.



# இந்திய சுதந்திர உணர்வு பரவுதல்

இந்தியாவில் 20ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. மக்களில் கால் பகுதியினர் இதனால் பாதிக்கப்பட்டார்கள். விவசாய நிலப் பரப்பை அதிகரிக்க நீர்ப்பாசன வசதிகள் எவ்வளவு செய்யலாம் எனக்கண்டறிய ஒரு கமிஷன் அமைக்கப்பட்டது. விவசாய வங்கிகள் தொடங்க ஒரு கமிட்டியும் நியமிக்கப்பட்டது.

ஆட்சிமுறையில் சீர்திருத்தங்கள் என்பது இந்தியரைப் பொறுத்தவரை ஒன்றுமே இல்லை என்றாலும் இந்திய சமஸ்தானங்கள் சமூக சீர்திருத்தங்களைச் செய்ய முற்பட்டன.

பரோடாவின் கெய்க்வாட் மன்னர் சிறுவயது விவாகத்தைத் தடை செய்யும் சட்டத்தை அமல் படுத்தினார். இதன்படி மணமகன் வயது 16க்கு மேலும் மணமகளின் வயது 12க்கு மேலும் இருக்க வேண்டும் என்றாகியது.

பாரசீகத்திலிருந்து குடிபெயர்ந்து வந்த பார்ஸிகள் எட்டாவது நூற்றாண்டில் இந்தியாவைத் தம் தாயகமாகக் கருதினார்கள். அவர்கள் மன உறுதியும் நம்பிக்கையும் கொண்டு இந்நாட்டிலேயே வாழலானார்கள். அவர்களில் பல சுதந்திரவேட்கை கொண்டவர்களைக் கூறலாம். இவர்களில்



டாடா

ஒருவரான ஜாம்ஷெட் டாடா அவர்கள் தொலைநோக்கு கொண்டவர். இந்தியாவைத் தொழில் மயமாக இவர் காண விரும்பினார்.

பீகாரில் 1901ல் சாக்சியில் இந்தியாவின் முதல் உருக்காலையை இவர் நிறுவினார். ஆறு ஆண்டுகளுக்குப்பின் அது டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் மில் என்றாக அது அமைந்த இடமும் ஜாம்ஷெட்பூர் என்று பெயர் பெற்றது.



மேடம் காமா

மற்றொரு பார்ஸி மேடம் பீகாஜீ காமா காங்கிரஸ் மகாசபைக் கூட்டங்களில் கலந்து கொள்பவர். இவர் 1902ல் உலக சுற்றுப்பயணம் மேற்கொண்டு இந்திய சுதந்திர உணர்ச்சி பற்றி எடுத்துரைக்கலானார். ஜெர்மனியில் ஸ்டார்ப்கர்ட்டில் நடந்த இரண்டாவது உலக சோஷலிஸ்ட் காங்கிரஸில் மூவர்ணக் கொடியை இந்தியக் கொடியாக ஏற்றினார். பின்னர் இதுவே இந்தியாவின் தேசியக் கொடியாகியது. அப்போது அக்கொடியை வணங்கியவர் ரஷ்யப் புரட்சியின் மாபெரும் தலைவர்களில் ஒருவரான லெனினும் ஆவார். மேடம் காமா இந்தியப் புரட்சியின் தாயாகப் பாராட்டப்பட்டார்.

இங்கிலாந்தில் 1901ல் ஏழாம் எட்வர்ட் பிரிட்டிஷ் சக்கரவர்த்தி

ஆனார். முதல் முறையாக அவர் 1903ல் இந்தியாவிற்கு வந்த போது டில்லியில் அவருக்கு இந்தியச் சக்கரவர்த்தி என்று மகுடாபிஷேகம் நடந்தது. அப்போது பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட மாகாணங்களில் விவசாயக் கடன்களுக்கு வசூலிக்கப்படும் வட்டியை ரத்து செய்தார்.

பீகாரில் புஸாவில் இம்பீரியல் விவசாய ஆராய்ச்சிக் கழகம் அப்போது ஆரம்பிக்கப்பட்டது. தற்போது அது இந்திய விவசாய ஆராய்ச்சி கௌன்சில் என்ற பெயரில் டில்லியில் இயங்கி வருகிறது.

- கவி ரவீந்திரர் கல்கத்தாவிற்கு 130 கி. மீ வடக்கில் போல்பூரில் சாந்தி நிகேதனை நிறுவினார்.

- இந்தியத் தாவர இயல் வல்லுனர் ஜகதீச சந்திரபோஸ் லண்டன் ராயல் சொசைடியில் சொற்பொழிவாற்றிய போது முதன் முதலாக தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்றும் அவை கூட உணர்ச்சிகளால் உந்தப்படுபவை என்றும் விளக்கிக் கூறினார்.


போஸ்

# உலகின் மற்ற பகுதிகளில்...



- ரைட் சகோதரர்கள் தாம் அமைத்த சிறு விமானத்தில் அமர்ந்து அமெரிக்காவின் வட கரோலினாவில் ஆகாயத்தில்ஓட்டிக்காட்டினார்கள்.



- ஒரு விவசாயியின் மகனான ஹென்றி போர்ட் கார் தயாரிக்கும் தொழிற் சாலையை அமெரிக்காவின் டெட்ராய்ட் நகரில் அமைத்து அந்நாட்டில் தொழில் புரட்சியைத் துவக்கி வைத்தார்.

# பிரிட்டிஷாருக்கு எதிராகக் கடும் கொந்

தொழில்கள் கண்காட்சி வருடாவருடம் காங்கிரஸ் மகாசபை கூடும் போது நடத்தப்படுவது வழக்கமாகியது. இவை அகமதாபாதில் 1902ல் முதலிலும் அடுத்து 1903ல் அப்போதைய மதராசிலும் நடைபெற்றன.




விவசாயம், தொழில்துறை, வங்கிகள் ஆகியவற்றை ஊக்குவிக்க கூட்டுறவு அமைப்புகள் சட்டம் 1904ல் வகுக்கப்பட்டது.

இந்தியாவிலேயே முதன்முதலாக எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி என அறிவித்தது திருவாங்கூர் சமஸ்தானம் தான்.

வங்காளம் 1905ல் இருபகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. கிழக்கு வங்காளத்தில் அஸ்ஸாமும் தலைநகராக டாக்காவும் இருந்தன. மேற்கு வங்காளத்தில் பீகார், ஒரிஸ்ஸாவின் ஒரு பகுதியும் இருக்க, தலைநகராக கல்கத்தா ஆக்கப்பட்டது. இது ஆட்சிபுரிய வசதியானது என அரசாங்கம் அறிவித்தது. ஆனால் மக்களோ தலைநகரான கல்கத்தாவிலிருந்து பெரும்பாலான முஸ்லீம் மக்களை ஒதுக்கி வைக்கவே இந்த ஏற்பாடு என்று எண்ணினார்கள்.

இதனால் மக்களிடையே பிரிட்டிஷாருக்கு எதிராக உணர்ச்சி அலைகள் உயர்ந்து எழுந்தன. கடை அடைப்புகளும் வேலை நிறுத்தங்களும் எங்கும் நடக்க பிரிட்டிஷ் பொருள்களை மக்கள் பகிஷ்கரிக்கலானார்கள். வங்காளம் இந்தச் சுதந்திரப் போராட்டத்தில் முன்னிலையில் இருந்தது.

அரசாங்கம் விவசாயத்திற்கு முதலிடம் கொடுத்து புனே, நாக்பூர், கான்பூர், கோயமுத்தூர் ஆகிய இடங்களில் விவசாயக் கல்லூரிகளைத் துவக்கியது.

வந்தே மாதரம் என்ற கீதம் 1906ல் கல்கத்தாவில் நடந்த 22வது காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் முதன்முறையாகப் பாடப்பட்டது. அக்கூட்டத்தின் தலைவர் தாதாபாய் நௌரோஜி, முகம்மது அலி ஜின்னா அக் கூட்டத்தில் உறுப்பினர் என்ற முறையில் கலந்து கொண்டார்.


நௌரோஜி

# தளிப்பு

ஆங்கிலேயர்களின் ஆட்சியை எதிர்ப்பதையே குறிக்கோளாகக்கொண்டு அரவிந்த கோஷ் 'பந்தே மாதரம்' என்ற செய்தித்தாளை ஆங்கிலத்தில் வெளியிட்டு வரலானார்.



அரவிந்த கோஷ்



- மலபார் கிராண்ட் சர்க்கஸ் என்ற முதலாவது இந்திய சர்க்கஸ் கம்பெனி கீழேரி குன்னிக்கண்ணன் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டது.
- முதலாவது டூரிங் சினிமாவை மேனக் டி சேத்னா என்பவர் ஆரம்பித்து முதலில் 'லைப் ஆப் க்ரைஸ்ட்' என்ற திரைப்படத்தை பொது மக்களுக்குக் காட்டினார்.

# உலகின் மற்ற பகுதிகளில்...



- ஐன்ஸ்டீன் தனது தியரி ஆஃப் ரிலேடிவிடி என்ற இயல்பியல் சூத்திரத்தை விளக்கினார்.



- பிராணிகளைச் சித்தரித்துக் காட்டும் முதலாவது கார்ட்டூன் திரைப்படத்தை ஜான் ஸ்டுவர்ட் ப்ளாக்டன் தயாரித்தார்.

# மிதவாதிகளும் தீவிரவாதிகளும்

சூரத்தில் 1907ல் நடந்த காங்கிரஸ் மகாசபை கூட்டத்தின் போது காங்கிரஸ் பிளவுபட்டது. தீவிர



வாதிகள் அன்னிய ஆட்சியாளர்களை நாட்டிலிருந்து விரட்ட கடும் நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென்று விரும்பினார்கள். மிதவாதிகளோ பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தில் இருந்து கொண்டே அதிக அதிகாரங்களைப் பெற்றுக் கொண்டால் போதும் என்று கூறினார்கள். தீவிரவாதிகள் மகாசபை நடந்த இடத்திலேயே தனியாக அரவிந்த கோஷ் தலைமையில் கூட்டம் நடத்தினார்கள். இதற்கு உறுதுணையாக திலகரும், பிபின் சந்திரபாலும் நின்றனர். மிதவாதிகளான சுரேந்திரநாக் பானர்ஜி, கோகலே போன்றவர்கள் ராஷ் பிஹாரி போஸ் தலைமையில் கூட்டம் நடத்தினார்கள். தீவிரவாதிகள் 1916ல் மீண்டும் காங்கிரசிற்கு வந்து இணைந்தார்கள்.

அரசாங்கம் சில தீவிரவாதிகளுக்கு 1908ல் அலிப்பூர் வெடிகுண்டு வழக்கில் தொடர்பு இருப்பதாகக் கூறி அரவிந்த கோஷைக் கைது செய்து சிறையில் அடைத்தது. இது அவரது வாழ்க்கையில் ஒரு திருப்பு முனை. இவர் அரசியலை விட்டு விட்டு ஆன்மீகத் துறையில் இறங்கி புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார்.

திலகர் கைது செய்யப்பட்ட போது பம்பாய் முதன்முறையாகத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைக் கண்டது. லட்சம் தொழிலாளர்கள் தொடர்ந்து ஆறு நாட்கள் வேலை நிறுத்தம் செய்தனர். அவர்கள் போலீசையும், ராணுவத்தையும் எதிர்த்துப் போராடினார்கள்.

நீண்டகாலமாக எதிர்பார்த்த இந்திய



ஆட்சி சீர்திருத்தச்சட்டம் 1909ல் நிறைவேற்றப்பட்டு ஆட்சி முறையில் மாற்றங்கள் அறிவிக்கப்பட்டன. தேசத் தலைவர்களுக்கு இது முழு திருப்தியை அளிக்காவிடினும் ஏதோ ஓரளவு முன் நகர்கிறோமே என்ற ஆறுதல் ஏற்பட்டது. வைசராயின் எக்ஸிக்யூடிவ் கௌன்சில் உறுப்பினராக சேர்க்கப்பட்ட முதலாவது இந்தியர் சர் சத்தியேந்திர பிரசன்ன சின்ஹா. வங்காள மாகாண எக்ஸிக்யூடிவ் கௌன்சிலின் முதலாவது இந்திய உறுப்பினர் ராஜா கிஷோரிலால் கோஸ்வாமி.

தென்னிந்தியாவில் தூத்துக்குடியில் வ.உ. சிதம்பரம் பிள்ளை முதலாவது சுதேசி கப்பல் கம்பெனியை நிறுவினார். அவர் கம்பெனியின் ஒரு பங்கிற்கு ரூ.10 வீதம் பல பங்குகளைச் சேர்த்து கிடைத்த தொகையில் இரு கப்பல்களை வாடகைக்கு அமர்த்திக் கப்பல் ஓட்டினார். இந்தியாவில் கப்பல் வாயிலாக வியாபாரம் செய்யும் தொழில் இவ்வாறு ஆரம்பமாகியது


வ.உ. சி

# உலகின் மற்ற பகுதிகளில்...



- சிறுவர் சாரண சங்கம் லார்ட் பேடன் பௌல் என்பவரால் தொடங்கப்பட்டது.

- லண்டனில் 200,000 பெண்களின் மாபெரும் ஊர்வலக் கூட்டம் தமக்கு வாக்களிக்கும் உரிமை வேண்டுமென்று கோரியது.

# ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு அறைகூவல்

அலிப்பூர் வெடிகுண்டு வழக்கில் தண்டிக்கப்பட்ட பத்து பேர்கள் அந்தமான் தீவுச்சிறையில் தனி அறைகளில் அடைக்கப்பட்டனர். அவர்களுக்கு விதிக்கப்பட்டது ஆயுள்தண்டனை. 1938ல்

தனி அறைச் சிறை



அச்சிறை மூடும் வரை அதில் அடைக்கப் பட்டவர்கள் 500 பேர்கள்.

ஒரு ஆங்கில அதிகாரியைச் சுட்டுக் கொன்றதற்காக உயர்கல்வி பெறப் போயிருந்த மதன்லால் தீங்கரா என்ற மாணவர் தூக்கிலிடப்பட்டார். தேசிய இந்திய சங்கம் தீங்கராவின் செயலுக்குக் கண்டனம் தெரிவித்தது. இதை அச்சங்கக் கூட்டத்தில் எதிர்த்த ஒரே நபர் வி.டி. சாவர்கர்.

அலகாபாத்தில் 1910ல் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கியவர் சர் வில்லியம் வெட்டர் பாரன். காங்கிரஸில் அப்போது இங்கிலாந்தில் படித்த மாணவர்களும், ஆங்கிலேயர்களும் கூட உறுப்பினர்களாக இருந்தார்கள்.

ஹிந்துக்களும், முஸ்லிம் களும் தம் வேற்றுமைகளை மறக்கவும், அவர்களிடையே பிளவு ஏற்படாமல் இருக்கவும் ஒரு ஆங்கிலேயர் காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அது மட்டுமல்ல, தீவிரவாதிகள்-மிதவாதிகள் என்றும் பார்க்கக் கூடாது என்பதுவும் இதற்கு ஒரு காரணம். அந்த மகாசபைக் கூட்டம் அரசாங்க நிர்வாகச் சீர்திருத்தங் களைக் கண்டு திருப்தி அடைவதாயும், வங்காளப் பிரிவினை சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்றும் கோரியது.

வங்கப்பிரிவினை சட்டத்தை ரத்து செய்ய அரசாங்கம் இசைந்தது. இது ஐந்தாம் ஜார்ஜ் மன்னரை வரவேற்க 1911ல் டில்லியில் கூட்டப் பட்ட தர்பாரில் அறி விக்கப்பட்டது. அப் போது அவர் இந்தியாவின் தலை நகராக கல்கத்தா இனி இராமல் டில்லி தான் என்று அறிவித்தார்.

பிரிக்கப்பட்ட இரு வங்காளப்



பகுதிகளும் 1912ல் ஒன்றாக இணைக்கப் பட்டன. இந்த வங்காளம் 1947 வரை ஒரே மாகாணமாக இருந்தது. கிழக்கு வங்காளம் இந்தியா பிரிக்கப்பட்ட போது பாகிஸ் தானில் சேர்க்கப்பட்டு 'கிழக்குப் பாகிஸ்தான்' என்று இருந்தது. பிறகு அது 1972ல் 'பங்களாதேஷ்' என்ற சுதந்திர நாடாக ஆகியது.

டில்லி தலைநகராக்கப் பட்டதும் புதுடில்லி, பழைய டில்லி என இரு நகரங்களாக்கி அவற்றின் அமைப் பிற்குத் திட்ட மிடப்பட்டது.

கவியரசர் ரவீந்திரர் தாம் எழுதிய 'ஜன கண மன' என்ற பாடலை முதல் தடவையாக பிரம்ம சமாஜம் நடத்திய மகதோத்ஸவத்தில் அவரே பாடினார்.



Tagore

பிறகு இந்தப் பாடல் தேசிய கீதமாக ஏற்கப்பட்டது.



- பெர்சியாவில் எண்ணெய் நிறையக் கிடைத்ததால் அங்கு ஆங்கிலோ-பெர்சியன் ஆயில் கம்பெனி அமைக்கப் பட்டது. இதனால் இந்தியர்களுக்கு பெர்சியாவில் (தற்போதைய ஈரான்) வேலை வாய்ப்புகள் அதிகரித்தன.

# உலகின் மற்ற பகுதிகளில்...

- பெல்ஜியத்தின் லியோபேக் லண்ட் பேக்லைட்டை கண்டு பிடிக்கவே 'பிளாஸ்டிக் யுகம்' ஆரம்பமாகியது. இது பல்வேறு உருவங்களில் பைரெக்ஸ், செலோஃபோன், உறுதிக் கண்ணாடி, பாலியஸ்டர் டெஃப்லான், நைலான் என்றெல்லாம் பெயர் பெற்றுள்ளது.
- லார்ட் பேடன் பௌலின் சகோதரி ஆக்னெஸ் சிறுமியர் சாரண இயக்கத்தைத் தொடங்கினார்.
- மிதக்கும் அரண்மனை என்று கருதப்பட்ட நீராவிக்கப்பல் 'டைட்டானிக்' இங்கிலாந்தின் சௌத்ஹாம்ப்டனிலிருந்து தன் முதல் பயணமாக ஏப்ரல் 14ல் கிளம்பியது. ஆனால் அது நியுயார்க்கிற்குப் போகும் வழியில்



ஒரு பனிப்பாறை மீது மோதி மூழ்க ஆரம்பிக்கவே அதிலிருந்த 2224 பயணிகளில், 1513 பேர்கள் கடலில் மூழ்கி இறந்து போனார்கள்.

# ஆயுதத் தற்காப்பிற்கு அறிவுரை

பஞ்சாபின் விவசாயிகளும் ஆலைத் தொழிலாளர்களும் அமெரிக்காவின் பஞ்சாபித் தொழிலாளர்களின் தலைவரும் கத்தார் கட்சியின் தலைவருமான லாலா ஹர்தயாலின் செயல்பாட்டுக்களால் கவரப்பட்டனர். இந்தக் கட்சி ஆயுதம் ஏந்தித்தான் தற்காப்பு செய்து கொண்டு சுதந்திரம் அடைய முடியும் என நம்பியது. ராணுவத்திலும் ஆங்கில அதிகாரிகளுக்கு எதிரான உணர்ச்சிகள் பஞ்சாபி படை வீரர்களிடையே பரவி இருந்தன.

கவி ரவீந்திரருக்கு அவரது படைப்பான 'கீதாஞ்சலி'க்கு *1913*ல் நோபல் பரிசு அளிக்கப்பட்டதும் ஒவ்வொரு இந்தியனும் பெருமை பொங்க தலை நிமிர்ந்து நின்றான்.

கோமகதா மாறு நிகழ்ச்சி பஞ்சாபிகளிடையே மேலும் பிரிட்டிஷாரை வெறுக்கச் செய்தது. சுமார் *600* சீக்கியர்கள் *1914*ல் கப்பலில் கனடாவுக்குச் சென்றார்கள். ஆனால் அங்கு அவர்கள் கரை இறங்கத்தடை செய்யப்பட்டனர். திரும்பி வந்த அவர்கள் தலைநகரில் இருக்கக் கூடாது என்றும் பஞ்சாபிற்கே போய் விட வேண்டுமென்றும் அரசாங்கம் விரும்பியது. ஆனால் அவர்கள் கல்கத்தாவில் இருக்கப் போவதாகப் பிடிவாதம் பிடிக்கவே அவர்களைக் கலைக்க துப்பாக்கிச் சூடு நடந்தது. பலர் இறக்க, மற்றவர்கள் படுகாயமுற்றனர்.



முதலாவது உலகப்போர் ஆரம்பமான போது இந்தியப்படை வீரர்கள் மேற்கு முனைப் போர்க்களத்தில் போரிட்டார்கள். அப்போரில் ஜெர்மனியின் நீர்மூழ்கிக் கப்பல் 'எம்டன்' மதராஸ் துறை முகத்தை பீரங்கி குண்டால் தாக்கியது.



# உலகின் மற்ற பகுதிகளில்...



- ஒரு மாகாணத்திலிருந்து வேறு மாகாணத்திற்குப் போகக் கூடாது என்ற தடையை தென்னாப்பிரிக்காவில் காந்திஜி மீறியதற்காக முதல் முறையாகச் சிறைப்பட்டார். இதற்கு முன் அவர் 2500 இந்தியர்களை நேட்டாலில் இருந்து டிரான்ஸ்வாலுக்கு அழைத்துச் சென்றார். அவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டு நேட்டாலுக்குத் திருப்பி அனுப்பப்பட்டனர். காந்திஜிக்கு ஒன்பது மாத சிறை தண்டனை விதிக்கப்பட்டது.

- 'டார்ஜான்' காமிக்ஸ் வெளியீடுகளில் 1914 முதல் தோன்றத் தொடங்கினான்.



- முதலாவது உலகப்போர் 1914 ஜூலை 27ல் ஆரம்பமாகியது. ஜூன் 28ல் சரஜீவோவில் ஆஸ்திரிய நாட்டுப்பட்டத்து இளவரசர் பெர்டினண்டும் அவரது மனைவியும் கொலை செய்யப்பட்டனர்.

ஆஸ்திரியா செர்பியாவை அதன் ஆஸ்திரியா-ஹங்கேரி விரோத நடவடிக்கைகளை நிறுத்துமாறு கூறியது. ஆனால் செர்பியா ஜூலை 23ல் ஆஸ்திரியாவின் இந்த கோரிக்கையை நிராகரித்தது. அதனால் ஜூலை 25ல் ஆஸ்திரியா செர்பியா மீது போர் தொடுத்தது.

ரஷ்யா, பிரான்ஸ், பிரிட்டன், மற்றும் சில நாடுகள் சேர்ந்து நேச நாடுகள் என்ற அமைப்பை ஏற்படுத்திக்கொண்டன. ஆஸ்திரியா, ஹங்கேரி, ஜெர்மனி, பெல்ஜியம், நெதர்லாந்து, ஜப்பான் ஆகிய நாடுகளைச் சேர்த்து அச்சு நாடுகள் என்று ஒரு அமைப்பை அமைத்தது. இந்த போர் ஜெர்மனிக்கும் ஆஸ்திரியாவிற்கும் மேற்கேயும் கிழக்குப் பகுதியிலும் நடந்தன.

- தென்-வட அமெரிக்காவைப் பிரிக்கும் பனாமா கால்வாயில் முதலாவது கப்பல் சென்றது.

- கட்டடக் கலையில் ஒரு புதுமை ஏற்பட்டது. இதனால் வானளாவும் கட்டடங்கள் தோன்றலாயின.

இவ்வித முதலாவது கட்டடமான 'உல்வொர்த்' பல மாடிக் கட்டடம் நியூயார்க் நகரில் கட்டப்பட்டது.



# அயல்நாட்டில் இந்திய அரசாங்கம்



காந்திஜீ இந்தியாவிற்கு 1915ல் வந்ததும் இந்திய அரசியலில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. அவர் தாம் கோகலேயின் வழியைப் பின்பற்றப் போவதாக அறிவித்தார். காந்திஜீயும், அவரது தென்னாப்பிரிக்க போனிக்ஸ் ஆசிரம மாணவர்களும் சாந்தி நிகேத னுக்குச் சென்று கவியரசர் ரவீந்திரரைக் கண்டார்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் கவியரசர் ரவீந்திரருக்கு உயர்பட்டத்தை அளித்துக் கௌரவித்தது.

● ராஜா மஹேந்திர பிரதாபும், பர்கத்துல்லாவும் காபூலில் சுதந்திர இந்திய அரசாங்கத்தை அமைத்திருப்ப தாக அறிவித்தனர்.

தியசாபிகல் சொசைட்டியின் தலை வியான அன்னிபெசன்ட் அம்மையார் 1916ல் புனாவில் 'ஹோம் ரூல்' இயக் கத்தை ஆரம்பித்தார்கள். அவரது நோக்கம் இந்தியர்களின் அரசியல் எதிர்பார்ப்புகளை ஒழுங்காக ஒன்றாக்கி அதை பிரிட்டிஷ் பாராளு மன்றத்திற்குத் தெரிவித்து இந்தியா விற்கு உள்ளாட்சியைப் பெற்றுத் தருவது தான்.

'ஹோம் ரூல் லீக்' என்ற அமைப்பு உருவாகியது. கோகலே போன்ற தலைவர்கள் இந்திய சுதந்திரத்திற்காகப் போராட மற் றொரு அமைப்பு ஏற்படுவதை விரும்ப வில்லை. ஆயினும் இவ்வாறு ஒரு அமைப்பு ஏற்படு வதைப் பலர் உற்சாகத் துடன் வர வேற்றனர். திலகர் அந்த லீகில் சேர்ந்தார்.



அன்னிபெசன்ட் அம்மையார்

பெண்களின் கல்விக்கு உயர் ஆதரவு கிடைத்தது. பேராசிரியர் கார்வே புனாவில் பெண்களுக்கான முதலாவது பல்கலைக் கழகத்தைத் துவக்கினார். பின்னர் இது 1936ல் பம் பாய்க்கு மாற்றப் பட்டது. பெண்களுக் கான முதலாவது மருத்துவக் கல்லூரி யான லேடி ஹார் டிஞ்ச் கல்லூரி டில்லியில் அமைக்கப்பட் டது. கல்கத்தா வில் 1917ல் காங் கிரஸ் மகாசபை



பேராசிரியர் கார்வே

கூட்டம் நடைபெற்றது. காங்கிரஸின் முதலாவது பெண் தலைவர் என்ற பெருமையை இக்கூட்டத்தில் அன்னி பெசன்ட் அம்மையார் அடைந்தார். இது அவரது ஹோம் ரூல் இயக்கத்திற்குப் பெரிதும் ஆதரவு அளிப்பது போலாயிற்று.

மாண்டேக் செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களின்படி அதிகாரத்தைப் படிப்படியாக ஒரு பொறுப்பு வாய்ந்த அரசிடம் ஒப்படைப்பது என்று தீர்மானிக்கப் பட்டது.

இந்தியாவில் காந்திஜீயை முதன் முறையாகக் கைது செய்தது சுதந்திரப் போராட்ட வேகத்தை அதிகரித்தது. இது அவர் பீகாரில் சம்பாரனில் சத்தியாக்கிரகம் செய்த போது நிகழ்ந்தது. பிரிட்டிஷ் எஸ்டேட்களில் ஒப்பந்த வேலையாட்களாக வேலை செய்து வந்த விவசாயிகள் இந்த இயக்கத்தில் சேர்ந்தனர்.

உலகப் போர் *1918*ல் முடிவுற்ற போது பிரிட்டிஷ் அரசாங்கம் துருக்கியை இரண்டாகப் பிரிக்க முயன்றது. 'கிலாபத் இயக்கம்' எனத் துவக்கி அலி சகோதரர்களான முகம்மதுவும், சௌகத்தும் இப்பிரிவினையை எதிர்த்து ஆங்கிலேயரை விரோதித்துக் கொண்டார்கள். ஆனால் தேசியத் தலைவர்களின் பாராட்டுகளும், மதிப்பும் அவர்களுக்குக் கிடைத்தன.

முதலாவது தொழில் சங்கம் மதராசில் பி.பி. வாடியாவால் துவக்கப் பட்டது. காந்திஜீயின் தலைமையில் அகமதாபாத் துணி ஆலைத் தொழிலாளர்களும் தங்கள் சங்கத்தை அமைத்தனர்.

# உலகின் மற்ற பகுதிகளில்...



- போர் *1915*ல் தரையிலும் கடலிலும் நடந்தது. மேற்கு முனையில் நேசநாடுகள் வெற்றி அடைந்து கொண்டிருக்கையில் கிழக்கு முனையில் ரஷ்யா பின் வாங்க வேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் பயணிகள் கப்பலான லூசிடானியா ஜெர்மன் நீர்மூழ்கித் தாக்கும் கப்பலால் தாக்கப்பட்டு மூழ்கடிக்கப்பட்டது. அதிலிருந்து *1200* பயணிகள் இறந்தனர். அவர்களில் *126* பேர்கள் அமெரிக்கர்கள். அமெரிக்காவும் உலகப் போரில் சேர வேண்டும் என்று பெருத்த கூக்குரல் எழுந்தது. ஆனால் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் உட்ரோவில்சன் தொடர்ந்து நடுநிலையையே கடைப்பிடித்து வந்தார். முதன் முறையாக ஜெர்மனி கண்ணீர்ப் புகையைப் பயன்படுத்தியது.
- ரஷ்யாவில் *1917*ல் புரட்சி ஏற்பட்டு தொழிலாளர் இன அரசாங்கம் ஆட்சியைக் கைப்பற்றியது. *300* வருடங்களாக ஆண்ட ஜார் வம்ச ஆட்சி ஒழிந்து கம்யுனிஸ்ட்களின் ஆட்சி அமைந்தது. லெனின் ட்ராட்ஸ்கி தலைமையில் ஆலைத் தொழிலாளிகள், விவசாயிகள், படை வீரர்கள் திரண்டு இந்த அக்டோபர் புரட்சியை நடத்தினார்கள்.



லெனின்

# அரசாங்கத்துடன் ஒத்துழையாமை

பிரிட்டிஷாரை எதிர்க்கும் போக்கு 1919 ஜாலியன்வாலா படுகொலைக் காரணமாகவே வந்தது. ரௌலத் சட்டம் என்ற கருப்புச் சட்டத்தை எதிர்க்க 25,000 பேர்கள் அங்கு கூடினர். இந்தச் சட்டப்படி யாரையும் எப்போது வேண்டுமானாலும் ராஜ துரோகி எனக் கைது செய்து விசாரணை இல்லாமல் சிறையில் தள்ளலாம்.



ஜாலியன் வாலாபாக்கில் கூடிய கூட்டத்தை நான்கு புறமும் கண்மூடித்தனமாகச் சுடவே 380 பேர் அதில் இறந்தனர். 1200க்கும் மேற்பட்டவர்கள் படுகாயமுற்றார்கள். இதனால் பஞ்சாபில் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது.

இந்திய சுதந்திரப் போராட்ட வரலாற்றில் ஜாலியன்வாலா சம்பவம் ஒரு மைல் கல்லாக விளங்கியது. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் லிபரல் கட்சியினர் இந்த சம்பவம் பற்றித் தம் கடும் ஆட்சேபணையை வெளிப்படுத்தினார்கள். அரசாங்கத்தின் இந்த அடக்குமுறைச் செயலை வன்மையாகக் கண்டித்து நாடு முழுவதும் கண்டனக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. கவி ரவீந்திரர் இதைக் கண்டிக்கும் விதத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் தமக்கு அளித்த உயர் பட்டத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டார்.

கிலாபத் இயக்கமும் வலுத்தது. அது அரசாங்கத்துடன் ஒத்துழையாமையைக் கடைப்பிடிக்கத் தீர்மானித்தது.

கல்கத்தாவில் 1920ல் நடந்த காங்கிரஸ் மகாசபை கூட்டம் சுதந்திரப் போராட்டத்தில் இந்தப் புதிய உத்தியைக் கையாளத் தீர்மானித்தது. அதே ஆண்டில் நாக்பூரில் நடந்த காங்கிரஸ் மகாசபை கூட்டத்தில் சுதந்திர நாடு என்ற கோரிக்கை மீண்டும் வலியுறுத்தப்பட்டது. ஒத்துழையாமை இயக்கத்திற்கு காந்திஜீ தலைமை தாங்க வேண்டும் என்றும் வேண்டிக் கொள்ளப்பட்டது.

அனைத்திந்தியக் கல்லூரி மாணவர் சங்கம் நாக்பூரில் லாலா லஜ்பத் ராய் தலைமையில் அமைக்கப்பட்டது.

பட்லர் கமிட்டி சமஸ்தான மன்னர்களின் சுதந்திரத்தை அங்கீகரித்ததோடு அவை தனி நாடுகள் என்ற முறையில் அரசாங்கக் கூட்டங்களில் கலந்து கொள்ளலாம் என்று அறிவிக்கப் பட்டது.

# உலகின் மற்ற பகுதிகளில்...



- பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளின் கூட்டு எதிர்ப்பால் ஜெர்மனி பின் வாங்கிச் சரணடைய வேண்டியதாயிற்று. இதனால் பாரீஸில் சமாதான உடன்படிக்கையில் கையொப்பமும் இட்டது. போரிலிருந்து ரஷ்யா விலகிக் கொண்டதால் பல பகுதிகளை இழக்க முடிவில் முதலாவது உலகப் போர் ஒருவாறாக முடிவிற்கு வந்தது.

- பிரிட்டன் பெண்களுக்கு வாக்களிக்கும் உரிமையை அளித்தது. ஆண்கள் வாக்களிக்க அவர்களது வயதை 21க்குக் குறைத்தது.

- உலகப் போர் அதிகாரப்பூர்வமாக முடிவுற்றது என்பது 1918 ஜுன் 28ல் ஏற்பட்ட வெர்சேல்ஸ் உடன்படிக்கையில் கையொப்பம் இட்ட பிறகு தான்.

- லீக் ஆப் நேஷன்ஸ் என்ற உலக நாடுகளின் கூட்டம் பாரீஸில் நடைபெற்றது. அமெரிக்கக் குடியரசுத்தலைவர் உட்ரோவில்சன் இதற்குத்தலைமை தாங்கினார்.



- லீக் ஆப் நேஷன்ஸின் முதலாவது அதிகாரப் பூர்வமான கூட்டம் ஜெனிவாவில் நவம்பர் 17ல் நடைபெற்றது. இதில் 27 உறுப்பினர்கள் கலந்து கொண்டார்கள். அமெரிக்க அதிபர் உட்ரோவில்சனின் 14 கொள்கைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. அவற்றில் கடைசிக் கொள்கையின்படி ஏதாவது இருநாடுகளிடையே வேறுபாடுகள் ஏற்பட்டால் மற்றொரு போர் ஏற்படாமல் தடுக்கப் பேச்சு வார்த்தைகள் வாயிலாகத் தீர்வு காணப்பட வேண்டும் என்பதாம்.

# சுதந்திரப் போரில் மாணவர் பங்கேற்பு

இந்திய சுதந்திரப் போர் வரலாற்றில் 1921 ஜனவரி 12ந் தேதி நினைவில் வைக்கத் தக்க நாள். முதலாவது சட்ட மன்றம் லார்ட் கானாட்டால் மதராசில் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இதன் ஆரம்ப விழாவிற்கு மிதவாதிகள் மட்டுமே வந்திருந்தனர். தீவிரவாதக் காங்கிரஸ்காரர்கள் வரவில்லை. லார்ட் கானாட் வருகையை எதிர்த்து ஆர்ப் பாட்டங்கள் நடந்தன. இது போல அடுத்த ஆண்டு வேல்ஸ் இளவரசர் இந்தியாவிற்கு விஜயம் செய்தபோது மக்கள் ஆர்ப்பாட்டங்களை நடத்தினர். அவர் சென்ற இடங்களில் எல்லாம் கறுப்புக் கொடிகள் காட்டப்பட்டன.

துப்பாக்கி சூடு நடத்தவே அந்தக் கூட்டம் வன்முறையில் இறங்கி காவல் நிலையத்தைத் தாக்கி 22 காவல்காரர்களைக் கொன்றது. இச் சம்பவத்திற்கு ஒரு வாரத்திற்குப் பின் நடந்த காங்கிரஸ் செயற்குழு கூட்டத்தில் காந்திஜீயின் வற்புறுத் தலின் பேரில் ஒத்துழையாமை இயக்கம் சற்று நிறுத்தி வைக்கப் பட்டது.

சித்தரஞ்சன்தாசும், மோதிலால் நேருவும், சுவராஜ் பார்ட்டியை ஆரம்பித்து காங்கிரசில் பிளவை ஏற்படுத்தினார்கள். கயா காங்கிரஸில் அவர்கள் இந்தியர்கள் சட்டமன்றங் களுக்குப் போய் அரசாங்கத்துடன் ஒத்துழையாமல் இருக்க வேண்டும் என்று ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார்கள். இதனை சி. ராஜகோபா லாச்சாரியார் தலைமையில் இயங் கிய பிரிவு எதிர்த்தது.



சி.ஆர். தாஸ்



மோதிலால் நேரு



ராஜகோபாலாச்சாரி

அகமதாபாதில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் ஒத்துழை யாமை இயக்கத்தைத் தொடர்ந்து நடத்துவது என்று தீர்மா னிக்கப்பட்டது. பஞ்சாபில் குஜரன்வாலாவில் நடந்த மாணவர் மாநாட்டில் மாணவர்கள் கல்லூரிகளையும் பல்கலைக் கழகங் களையும் பகிஷ்கரித்து விட்டு சுதந்திரப் போரில் பங்கேற்பது என்று தீர் மானிக்கப்பட்டது.

கோரக்பூர் மாவட்டத்தில் சௌரி சௌரா என்ற இடத்தில் 2000 காங்கிரஸ் தொண்டர் களும் விவசாயிகளும் 1922ல் ஆர்ப்பாட்டம் நடத்திய போது போலீஸ்

- சாந்திநிகேதன் விஸ்வபாரதி பல்கலைக் கழகமாக மாறியது. பல மொழிகள், இலக்கியம், மதம், இசை, கலைகள் எனப் பல துறைகளில் இங்கு பயிற்சி பெற ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

(அடுத்த இதழில்-இந்தியா குடியரசாக ஆனது)

59. போரில்
பாண்டவர் வெற்றி

# மகாபாரதம்

பத்து நாட்கள் போர் புரிந்து பீஷ்மர் போர்க் களத்திலேயே விழுந்துவிட்டார். சிகண்டியை பீஷ்மருக்கு முன் அர்ஜுனன் நிறுத்தி, அவர் அவனுடன் போர் புரிய இயலாத நிலையில் அம்பை எய்து பீஷ்மரை வீழ்த்தினான். பீஷ்மர் போர்க் களத்தில் விழுந்து விட்டபோதிலும், உடனே இறந்து விடவில்லை. அவரது உடலில் நிறைய அம்புகள் குத்தி இருந்ததால், அந்த அம்புகளே அவருக்குப் படுக்கையாக ஆகின. அவருக்குத் தாகம் எடுக்கவே, அவரது தலையருகே அர்ஜுனன் தரைக்குள் அம்பை எய்து, பாதாள கங்கையை வரவழைத்து அவரது வாயில் விழச் செய்து அவரது தாகத்தைத் தணித்தான்.

பீஷ்மருக்குப் பின், துரோணர் கௌரவப் படைகளுக்குத் தலைமை தாங்கி ஐந்து நாட்கள் போர் புரிந்தார். அவர் அமைத்த பத்ம வியூகத்தில், அர்ஜுனனின் மகன் அபிமன்யு எதிரிகளிடம் அகப்பட்டு மாண்டான். இது நடக்கையில் அர்ஜுனன் போர்க் களத்தில் வேறொரு பக்கத்தில் போர் புரிந்து கொண்டிருந்தான். அபிமன்யுவைக் காக்கப் பாண்டவப் படை வீரர்கள் பத்ம வியூகத்தில் நுழைய முயன்ற போது சைந்தவன் அவர்களைத் தடுத்தான். அதனால் யாராலும் அபிமன்யுவுக்கு உதவ முடியவில்லை.

இதைக் கேட்ட அர்ஜுனன் சைந்தவனைக் கொல்வதாகச் சபதம் செய்து





மறுநாள் போரில் கொன்றும் விட்டான். துரோணரும் திருஷ்டத்யும்னனும் கடுமையாகப் போர் புரிந்து கொண்டிருக்கையில், தருமர் அசுவத்தாமன் இறந்து விட்டதாகத் துரோணர் காதில் விழும்படிக் கூவினார். தருமரே அவ்வாறு சொன்னால் அது உண்மையே என்று எண்ணி துரோணர் ஆயுதங்களைப் போட்டு விட்டு மலைத்து நின்றார். அது தான் தனக்குக் கிடைத்த அரிய வாய்ப்பு என்று திருஷ்டத்யும்னன் அவரைத் தாக்கிக் கொன்றான்.

துரோணர் இறந்தபின் கௌரவப் படைகளுக்கு கர்ணன் தலைமை தாங்கினான். தனக்குத் தேரோட்டியாக சல்லியனை அமர்த்துமாறு கர்ணன் துரியோதனனிடம் கேட்டுக் கொண்டான். துரியோதனன் சல்லியனிடம் அதைக் கூறி, சல்லியனை கர்ணனின் தேரோட்டியாக இருக்க சம்மதிக்கச் செய்தான். ஆனால் கர்ணன் போர் புரிந்த இரண்டு நாட்களிலும், சல்லியன் அவனை இகழ்ந்து அவமானப்படுத்தி போரில் அவனது உற்சாகத்தைக் குறைத்துக் கொண்டே இருந்தான். கர்ணன் இரண்டாவது நாளாகப் போர் புரிந்தபோது அவனது ரதத்தின் சக்கரம் பூமியில் புதைந்து விடவே, அப்போது அர்ஜுனன் அம்பை எய்து கர்ணனைக் கொன்றான்.

கர்ணனுக்குப் பிறகு, சல்லியன் கௌரவப் படைகளின் தலைமையை ஏற்றான். ஆனால் அன்றே அவன் தருமருடன் போர் புரிந்து மடிந்து போனான். இவ்வாறு பாரதப் போர் பதினெட்டு நாட்கள் நடந்து முடிவுற்றது. போரில் பதினெட்டு அக்ஷௌணி சேனை அழிந்தது. துரியோதனனைத் தவிர மற்ற கௌரவர்களெல்லாம் போரில் இறந்து போனார்கள். துச்சாதனனை பீமன் பயங்கரமாய்க் கொன்று அவனது ரத்தத்தைக் குடித்தான்.

போரில் இரு தரப்பிலும் லட்சக் கணக்கில் இறந்து போயினர். பாண்டவர்களின் தரப்பில் பாண்டவர் ஐவரும், உப பாண்டவர்களும், யுயுத்சுவும், சாத்தியகியும், திருஷ்டத்யும்னனும், சிகண்டியும் மிகுந்தனர். யுயுத்சு திருதராஷ்டிரனுக்குப் பிறந்தவன். போர் முடிந்ததும் அவன் அஸ்தினாபுரத்திற்குச் சென்று விட்டான்.

கௌரவர்களின் தரப்பில் அசுவத்தாமன், கிருபர், கிருதவர்மன்,



துரியோதனன் ஆகியோர் மட்டுமே போரில் இறக்கவில்லை. போர் முடியும் போது அசுவத்தாமனும், கிருபரும், கிருதவர்மனும் துரியோ தனனைத் தேடிப் பார்த்தார்கள். ஆனால் அவன் எங்கும் தென்பட வில்லை. துரியோதனன் தன் கதையை எடுத்துக் கொண்டு ஒரு நீர் மடுவுக்குள் போய் உட்கார்ந்து விட்டான். அவனுக்கு அசுவத்தாமனும், கிரு பரும், கிருதவர்மனும் உயிருடன் இருந்தது தெரியவில்லை.

மடுவிலிருந்த துரியோதனனைக் காண சஞ்சயன் வந்தான். தனக்குத் தோல்வி ஏற்பட்டதற்காகவும், தன் னைச் சேர்ந்தவர்கள் எல்லாம் இறந்து போனதற்காகவும் மிகவும் வருத்தப் பட்டுக்கொண்டு துரியோதனன் சஞ் சயனிடம், "நம்மவர்களில் உங்களைத் தவிர வேறு யாருமே உயிருடன் இல்லையா? நான் இன்னமும் உயி ருடன் இருப்பதாகவும், இந்த மடு வில் இருப்பதாகவும் என் தந்தை யிடம் கூறுங்கள்", என்றான்.

சஞ்சயன் அங்கிருந்து திரும்பிப் போகும் பொழுது வழியில் அசுவத் தாமனையும், கிருபரையும், கிருத வர்மனையும் பார்த்தான். அவர்களும் அவனிடம், "சஞ்சயா...! நீ துரியோ தனனை எங்கேயாவது பார்த்தாயா?", என்று கேட்டார்கள். சஞ்சயனும் துரியோதனன் மடுவில் இருப்ப தாகக் கூறி, அந்த மடுவைச் சுட்டிக்காட்டி விட்டுச் சென்றான்.

அப்போது அசுவத்தாமன், "ஐயோ! நீங்கள் உயிருடன் இருப்பது அவ னுக்குத் தெரியாது போலிருக்கிறதே. நாம் யாவரும் சேர்ந்து மீதமுள்ள பாண்டவர்களை ஒழித்து விடலாம்", என்றான். பிறகு அவன், "நாம் போய் களத்தில் இருக்கிறார்களா என்று பார்ப்போம்", எனவே அவர்கள் மூவரும் குருக்ஷேத்திர மைதானத் திற்குச் சென்றார்கள்.

அங்கு யாரும் இருக்க வில்லை. கௌரவ கூடாரங்களில் இருந்த பெண்கள் ஹஸ்தினாபுரத்திற்குப் பணியாட்களுடன் சென்று விட்டது தெரிந்தது. போர் முடிந்த போதிலும் பாண்டவர்களும், கிருஷ்ணனும் துரியோதனனைத் தேடலானார்கள். அவன் மடுவில் ஒளிந்திருப்பது அவர்களுக்குத் தெரிந்தது. அவர்கள் அங்கே சென்றார்கள். துரியோதன னும் மடுவிலிருந்து வெளியே வந்தான்.



அவ்வளவு தான், பீமன் அவனைப் பிடித்துக் கொண்டான். இருவரும் தம் கதைகளால் அடித்துக் கொண்டு போர் புரிந்தார்கள். பீமன் துரியோதனனின் தொடையில் அடித்து குற்றுயிராக அவனை வீழ்த்தினான்.

தொடை எலும்பு ஒடிந்து விழுந்து கிடந்த துரியோதனனை அசுவத் தாமனும், கிருபரும், கிருதவர்மனும் பார்த்தார்கள். அவனுடைய நிலை யைக் கண்டதும் அவர்களது கண் களில் நீர் நிரம்பி விட்டது. அன்றிரவே பாண்டவர்களையும், அவர்களைச் சேர்ந்தவர்களையும் கொன்றுவிடுவ தாக அசுவத்தாமன் துரியோதன னுக்குச் சத்தியம் செய்து கொடுத்தான். அது கேட்டு துரியோதனன் மகிழ்ந்து போய் அசுவத்தாமனைத் தன் படை களின் சேனாதிபதியாக நியமித்தான்.

அசுவத்தாமனும், கிருபரும், கிருத வர்மனும் இரவானதும் பாண்டவர் களது பாசறைக்கு அருகில் ஓரிடத்தில் ஒளிந்து கொண்டார்கள். அதற்கு அடுத்தாற்போல காடு இருந்தது. அங்கு ஆயிரம் கிளைகளுள்ள பெரிய ஆலமரம் இருந்தது. அது இருளை அதிகப்படுத்தியது. அசுவத்தாமன் பாண்டவர்களையும், அவர்களைச் சேர்ந்தவர்களையும் அவர்கள் தூங்கிக் கொண்டிருக்கையில் கொன்று விட்த் தீர்மானித்தான். பாண்டவர்கள் போரில் புரிந்த அநியாயங்களுக்குப் பழிவாங்க, தான் இவ்வாறு செய்வது சரியே என அவன் எண்ணினான்.

அவன் கிருபரையும், கிருதவர் மனையும் தன் இந்தச் செயலுக்குச் சம்மதிக்க வைத்து அழைத்துச் சென்றான். கூடாரத்திற்குள் நுழைந்து, அங்கு தூங்கிக் கொண்டிருந்த திருஷ் டத்யும்னனை எழுப்பி வாளால் வெட்டிக் கொன்றான். இந்தச் சந்தடி கேட்டு, வேறு சிலர் ஓடி வரவே அவர்களையும அசுவத்தாமன் தாக்கிக் கொன்றான். சிலர் கூடாரத்திலிருந்து வெளியே ஓடி வரவே கிருபரும், கிருதவர்மனும் அவர்களைப் பிடித் துக்கொன்று விட்டார்கள்.

இதன்பின் அவர்கள் அங்கிருந்த கூடாரங்களுக்கு நெருப்பு வைத்தார் கள். அதன் பின் தாம் எல்லோரையும் கொன்று விட்டதாக அவர்கள் திருப்தி அடைந்து, அதை துரியோதனனிடம் தெரிவிக்கச் சென்றார்கள். ஆனால் அவர்கள் எண்ணியபடி பாண்ட வர்கள் கூடாரத்தில் இருக்கவில்லை.

கிருபரும், கிருதவர்மனும் துரியோதனனைப் பார்க்கச் சென்ற போது துரியோதனன் மரண வேதனையால் துடித்துக் கொண் டிருந்தான். அவன் அவர்கள் சொன்னதைக் கேட்டு மகிழ்ந்து இறந்து போனான்.

போரில் வெற்றி பெற்ற போதிலும், தம் மைந்தர்களும், உறவினர்களும் இறந்து போனது கண்டு பாண்டவர்களும், திரௌபதியும் மிகவும் வேதனைப்பட்டார்கள். இப்படி கோரமானச் செயலைப் புரிந்த அசுவத்தாமனைக் கொன்றுவிட்டு வருவதாகக் கூறி பீமன் கிளம்பினான். அப்போது துரௌபதி, "அந்த அசுவத்தாமன் தலைக்குள் ஒளிவீசும் மணி உள்ளதாம். அவனைக் கொன்று அந்த மணியை எடுத்து வந்து என்னிடம் கொடுங்கள்", என்று கூறி அனுப்பினாள். பீமனும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு உற்சாகத்துடன் ரதத்தில் கிளம்பினான்.

கிருஷ்ணர் அதைக் கண்டு பீமனுக்குத் துணையாக அர்ஜுன னைப் போகச் சொன்னார். அர்ஜுனன் தருமரையும், கிருஷ்ணரையும் வேறொரு ரதத்தில் ஏற்றிக் கொண்டு பீமனின் ரதத்தின் பின்னால் சென்றான். பீமனோ தன் ரதத்தை வெகு வேகமாக ஓட்டிக் கொண்டு சென்றான்.

அவர்கள் கங்கை நதிக் கரையை அடைந்த போது, வியாசரும் அவரது சீடர்களும் சேர்ந்து இருந்த கூட்டத்தில் அசுவத்தாமன் இருந்தான். அவன் சாதுவின் உடையில் இருந்தான்.



அவனைக் கண்டதும் பீமன் பயங்கரமான குரலில், "ஏ...! அசுவத்தாமா!", எனக் கூப்பிடவே அசுவத்தாமனும் திரும்பிப் பார்த்தான். பீமன், அர்ஜுனன், தருமர், கிருஷ்ணர் ஆகியோரைக் கண்டதும் வெலவெலத்துப் போய், அவன் தன் தந்தை தனக்குக் கொடுத்த 'பிரம்மசிரோநாமம்' என்ற பயங்கரமான அஸ்திரத்தைப் பிரயோகித்து விட்டான்.

கிருஷ்ணரும் அதே அஸ்திரத்தை அசுவத்தாமன் மீது எய்யும்படி அர்ஜுனனிடம் கூறினார். இரு அஸ்திரங்களும் பயங்கரமாக ஒன்றையொன்று தாக்கின. அப்போது வியாசரும், நாரதரும் வந்து அர்ஜுனனிடமும், அசுவத்தாமனிடமும் தத்தம் அஸ்திரங்களைத் திரும்பப் பெறுமாறு கூறினார்கள். அர்ஜுனன் தான் எய்ததைத் திரும்பப் பெற்றான்.

ஆனால், அசுவத்தாமனால் அவ்வாறு செய்ய முடியவில்லை. அது பாண்ட வர்களை நோக்கி எய்ததால், அவர் களில் யாரையாவது தாக்கி விட்டுத் தான் வர வேண்டும் என்பதால் கிருஷ்ணர் அதனை உத்தரையின் கர்ப்பத்தைத் தாக்கும்படிச் செய்தார். அசுவத்தாமன் தலையில் உள்ள மணியை இதற்கு பதிலாகக் கொடுக்க வேண்டும் என முனிவர்கள் கூற, அவனும் அவ்வாறே செய்தான். அதன்பின் அவன் தவம் செய்யப் போய்விட்டான்.

பீமன் அந்த மணியை துரௌபதியிடம் கொடுக்க, அவள் தருமரிடம் கொடுத்து தலையில் அணிந்து கொள்ளச் சொன்னாள். ஹஸ்தினாபுரத்திலோ திருதராஷ்டிரன் தன் எல்லா மகன்களும் போரில் இறந்து விட்டார்களே என்று வருத்தப் பட்டான். அவன் காந்தாரியையும், குந்தியையும் அழைத்துக் கொண்டு போர் நடந்த இடத்திற்கு வந்தான். இதைக் கேட்டு பாண்டவர்கள், சரத்தியகி, கிருஷ்ணர் ஆகியோரும் அங்கு வந்தார்கள்.

தருமர் திருதராஷ்டிரனை வணங்க, அவன் அவரைக் கட்டித் தழுவி, ஆசீர், வதித்தான். பின் ஒவ்வொருவராகத் தாம் யாரெனக் கூறி வணங்கவே, அவன் அவர்களைக் கட்டித் தழுவி, ஆசி கூறினான். பீமன் தன் பெயரைக் கூறிக்கொண்டு திருதராஷ்டிரனிடம் வந்தபோது கிருஷ்ணர் சட்டென அவனைத் தடுத்து, அவனுக்குப் பதிலாக ஓர் இரும்புச் சிலையை திருதராஷ்டிரனின் முன் வைத்தார். திருதராஷ்டிரன் அதைக் கட்டித் தழுவுகையில் அது தூள்தூளாகி விட்டது.

அப்போது திருதராஷ்டிரன், "ஐயோ! பீமனை நசுக்கிக் கொன்று விட்டேனே...!", என்று நீலிக்கண்ணீர் வடித்தான். கிருஷ்ணர் அவனிடம், "கவலைப்படாதீர்! நீங்கள் கட்டித் தழுவியது இரும்புச்சிலை. பீமன் உயிருடன் தான் இருக்கிறான்", என்றார். திருதராஷ்டிரன் வெட்கித் தலை குனியவே கிருஷ்ணர், "இனி மேல் பாண்டவர்கள் தான் உங்கள் மைந்தர்கள். அவர்களிடம் பாசத் தோடு இருங்கள்", என்றார்.





# கல்விக் கடல்

'கல்விக்கடல்' கண்ணப்பன் எல்லா நூல்களையும் படித்தவன். வடமொழியான சமஸ்கிருதத்திலும், தாய்மொழியான தமிழிலும் திறமை பெற்றவன். அவனது தந்தை நஞ்சுண்டனும் மாபெரும் பண்டிதர். அதனால், தன் மகனுக்கு அவர் சிறு வயதிலிருந்தே இலக்கிய ஆர்வத்தை ஊட்டியிருந்தார்.

கண்ணப்பன் சங்க இலக்கியங்களைக் கற்றவன். ஐம்பெரும் காப்பியங்களான மணிமேகலை, சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவற்றைப் படித்தவன். தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருப்புகழ், திருவாய்மொழி, திருக்குறள் என யாவற்றையும் ஆழ்ந்து படித்தவன். வடமொழியிலும் வால்மீகி ராமாயணம், மகாபாரதம் மற்றும் காளிதாசர், பவபூதி, பர்த்துருஹரி போன்றவர்களின் மாபெரும் படைப்புகளை அலசிப் படித்தவன். அது மட்டுமல்ல 'அஷ்டாவதானம்' பயின்றவன். ஒரே சமயத்தில் எட்டு வல்லுநர்கள் வெவ்வேறு துறைகளில் வினாக்களைக் கேட்டால் அவற்றிற்கு உடனுக்குடன் விடையளிக்கும் திறன் பெற்றவன்.

இவ்வளவு கற்றவனை யாவரும் 'கல்விக்கடல்' என்று போற்றிப் பாராட்டி வந்ததில் சற்றும் வியப்பில்லையே! அவனுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டுமென்று நஞ்சுண்டன் எண்ணினார். நன்கு கற்று புலமை பெற்ற தன் மகன் கண்ணப்பனுக்கு மனைவியாக வரக்கூடியவள், அவனது தாய்மாமனின் மகளான பூங்கோதை தான் என்று அவர் தீர்மானித்தார்.

சுவாமி சங்கரராம்

அவரது தீர்மானம் இப்படி இருந்த போதிலும், கண்ணப்பனுக்கு அப்போது திருமணம் செய்து கொள்ள விருப்பமில்லை. அவன் தன்னைப் போல நன்கு படித்துப் புலமை பெற்ற பெண் ஒருத்தியைத் தான் மனைவியாக அடைந்தால் அவளுடன் இலக்கியச் சர்ச்சைகள் நடத்தி மகிழலாம் என்று அவன் எண்ணினான்.

கண்ணப்பன், "அப்பா...! எல்லோரும் என்னைக் 'கல்விக்கடல்' என்று புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட எனக்கு அதிகம் படிக்காத ஒரு பெண் மனைவியானால் எனக்கும் திருப்தி ஏற்படாது. ஊராரும் அதைச் சொல்லி கேலி தான் செய்வார்கள்", என்றான்.

நஞ்சுண்டனும் தன் மனதில் 'இவனுக்கு இளம் வயது, உலக அனுபவம் இன்னமும் இல்லை. இவனை இவனது போக்கிலேயே விட்டுத்தான் திருப்ப வேண்டும்' என எண்ணி, ''கண்ணப்பா...! நீ சொல்வதெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும். நீ உன் தாய் மாமன் ஊருக்குப் போய் பூங்கோதையைப் பார்த்து விட்டு வா. அவளை உனக்குப் பிடிக்கவில்லை என்றால், பிறகு வேறு பெண்ணைப் பார்க்கலாம்", என்றார்.

நஞ்சுண்டனுக்கு பூங்கோதையைப் பற்றி நன்கு தெரியும். அவள் அழகானவள், புத்திசாலி, சாமர்த்தியசாலி. அவளால் கண்ணப்பனின் மனதை மாற்றி விட முடியும் என்ற முழு நம்பிக்கை அவருக்கு இருந்தது.





பிறகு அவர் தன் மகள் பூங் கோதையை அழைத்து, "யார் வந்திருக்கிறார் பார்த்தாயா? உன் அத்தான் தான். கல்விக் கடல், மகா மேதை நம் வீட்டில் நாலைந்து நாட்கள் தங்கப் போகிறான். அவனை நன்கு கவனித்துக் கொள்வது உன் பொறுப்பு", என்றார்.

பூங்கோதையின் அழகையும், தோற்றத்தையும் கண்டு அவன் மலைத்துப் போனான். அவன் கற்பனை செய்து வைத்திருந்த பட்டிக் காட்டுப் பூங்கோதைக்கும், இப்போது நேரில் காணும் பூங்கோதைக்கும், மலைக்கும், மடுவுக்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டான். தூய ஆடையணிந்து, பளிச்சென்ற முகத் தோடு, புன்சிரிப்போடு எப்போதும் இருக்கும் அவளைக் கண்டதும் எடுத்த எடுப்பிலேயே அவன் மனதில் ஒரு சலனம் ஏற்பட்டது.

தன் மாமன் அவளிடம் தன்னை நன்கு கவனித்துக் கொள்ளும்படிக் கூறியது தம்மிருவரிடையே நெருங் கிய தொடர்பு ஏற்பட வேண்டும் என்பதற்காகத் தான் என்பதை கண்ணப்பன் ஊகித்து விட்டான். அதனால், அவன் தன் மனதில் 'எனக்கு வேண்டியது புலமை, அழகல்ல. ஊருக்குச் செல்லுமுன் அதை என் மாமனிடமும் பூங்கோதை யிடமும் சொல்லி விட்டே போகிறேன்' என்று தன் மனதிற்குள் எண்ணிக் கொண்டான்.

அதனால் தான், தன் மகன் கண்ணப் பனை அவனது தாய்மாமன் வீட் டிற்கு அனுப்ப அவர் தீர்மானித்தார்.

கண்ணப்பனுக்கு என்னவோ தன் தாய் மாமன் ஊருக்குப் போக இஷ்டமே இல்லை. தன் தந்தை மிகவும் வற்புறுத்துகிறாரே என்பதற் காக அங்கு போக அரை மனதுடன் சம்மதித்தான். நஞ்சுண்டனும் மன திற்குள் சிரித்தவாறே அவனை வழி யனுப்பி வைத்தார். அவன் தன் மாமனின் ஊரை அடையவே, அவனது தாய் மாமனும், "ஆகா! வந்தாயா...! நீ வந்ததில் எவ்வளவு சந்தோஷப் படுகிறோம் தெரியுமா? விவரம் தெரிந்து நீ இங்கே வருவது இது தான் முதல் தடவை. உனக்கு இங்கே எந்தக் குறையும் இராமல் பார்த்துக் கொள்கிறோம்", என்றார்.

ஆனால், அவன் எண்ணியது

போல நடக்காது என்பது அவனுக்குப் புரிந்தது. ஏனெனில், பூங்கோதை எல்லா வேலைகளையும் சுறுசுறுப் புடன் முறையாகச் செய்வது கண்டு அவன் ஆச்சரியப்பட்டான். அதி காலையில் அவள் எழுந்து வீட்டு வாசல் தெளித்து, அழகாய் கோலம் போடுவதும், வயதான தன் பாட்டிக்கு நேரம் தவறாமல் மருந்தைக் கொடுப் பதும், தன் தாய்க்கு பூஜை செய்வதற்கு வேண்டியவற்றை எடுத்து வைப்ப தும், சமையலறையில் தன் அண்ணி க்கு உதவி செய்வதும் கண்டு, 'ஓ...! இவள் கெட்டிக்காரி தான்' என்ற எண்ணம் கண்ணப்பன் மனதில் ஏற்பட்டது.

எல்லோரிடமும் சாமர்த்தியமாகப் பேசி வரும் அவளை அவனால் பாராட்டாமல் இருக்கவும் முடிய வில்லை. வந்த தினமே அவனைத் தன் ஊரிலுள்ள முக்கிய இடங்களுக்கு பூங்கோதை அழைத்துச் சென்று அவற்றின் சிறப்புகள் என்ன என்று விளக்கினாள். அப்போது கண் ணப்பனும் அவளிடம், "நீ உன் ஊரைப் பற்றி இவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறாயே! ஆனால், எனக்கோ என் ஊரைப் பற்றி எதுவுமே தெரியாது", என்றான்.

அப்போது பூங்கோதை, "நீங்கள் என்னை அளவு கடந்து புகழ்கிறீர்கள் என்றே நினைக்கிறேன். நீங்களோ கல்விக் கடல். உங்களைப் பற்றி நீங்கள் இதுவரை எதுவுமே கூற வில்லையே! இப்போது சொல் லுங்கள்", என்றாள் புன்சிரிப்பை



உதிர்த்தவாறே.

கண்ணப்பனும் தான் படித்த நூல் களைக் கூறித் தனக்கு 'அஷ்டாவ தானம்' தெரியும் என்றான். அஷ்டாவ தானம் என்றால் என்ன என்பதையும் அவன் அவளுக்கு விளக்கினான். தனக்குப் பரிசளிக்கப்பட்ட தோடா வையும், அவளுக்குக் காட்டி, "நீ இது போன்ற தோடாவை அடைய விரும்புகிறாயா? உனக்கு எல்லாம் ஒரே வருடத்தில் கற்றுக் கொடுக் கிறேன். உனக்கு இருக்கும் அறிவுக் கும், சாமர்த்தியத்திற்கும், நீ எதையும் விரைவில் கற்றுக் கொண்டு விடுவாய் என்று எனக்குத் தெரியும்", என்றான். ஆனால் பூங்கோதை, "நான் இலக் கியங்களைக் கற்றுத் தங்கத் தோடா பெற விரும்பவில்லை. மனிதர்களின் தேவைகளை அறிந்து, அவற்றை அவர்களுக்குக் கிடைக்கச் செய்வதில் மகிழ்ச்சி அடைகிறேன். அதனால் தான் வீட்டில் எல் லோருக்கும் எல்லா உதவிகளையும் செய்து வருகிறேன்", என்றாள்.

இதைக் கேட்டு கண்ணப்பன் குத்துக்கல் போல நின்று விட்டான். சற்று நேரத்திற்குப் பின் அவன், "ஆம்! நீ சொல்வது உண்மையே. என் படிப் பால் வாத விவாதங்கள் புரியலாம். ஆராய்ச்சிகள் செய்யலாம். இதனால் வெகு சில பேர்களே பயனடைய முடியும். ஆனால், நீ செய்யும் பணி களால் யாவரும் பயனடைகிறார்கள். இதில் உண்மையிலேயே மன நிறைவு காண முடியும். எனவே, உனக்கு இலக்கியங்களைக் கற்றுக் கொடுத்து தங்கத் தோடா வாங்கிக் கொடுக்கும் எண்ணத்தை நான் கைவிட்டு என் தங்கத் தோடாவையே உன் கையில் அணிவித்து உன்னை நான் ஏற்கிறேன்", என்றான்.

விரைவிலேயே அவர் களுக்குத் திருமணமும் நடைபெற்றது என்று கூறவும் வேண்டுமோ!



அம்புலிமாமாவின்
அன்பளிப்பு

# பரோபகாரி பழனி

ஓவியங்கள் - பரணி.

பிசாசாக நடிப்பு - 1.
















இரவு முழுவதும் இப்படி இருந்து விட்டு காலை யானதும் அவன் தன் வீட்டிற்கு வந்து விடுவான்.
ஆகா...! யாருமே பார்க்கவில்லை !


ஆல மரத்தின் கீழ் ஒரு பிசாசு சுற்றிச் சுற்றி வருகிறதாம்!
ஆமாம்...! பிசாசு தான் அது.
ஆம்... உண்மையே! நீங்கள் மட்டுமல்ல. அது பற்றி இன்னும் பலரும் சொன்னார்கள். என்ன செய்ய லாம் ?


ஆலமரத் துப்பிசாசு பற்றிக் கேள்விப் பட் டீர்களா?
ஆல மரத்தின் மேலா உள்ளது ?
இறந்து போன என் தந்தை தான் பிசாசாகி ஆல மரத்தில் இருக்கிறார்.


பிசாசு...! பேய்...! காப்பாற் றுங்கள்...!
அதனால் அந்த மரத்தின் பக்கம் போகக் கூட ஊரார் பயப்பட்டார்கள்.


இருட்டிவிட்டால் யாரும் வீட்டிலிருந்து வெளியே வர பயப்பட்டார்கள்.


பயப்படாதீர்கள்...! அங்கே பிசாசும் இல்லை. பேயும் இல்லை. எழுந்திருங்கள். காய்ச்சல் போய்விட்டது. என்ன சாப்பிடுகிறீர்கள்?
பிசாசு...! போய் விட்டதா?







ஊரில் யாருக்கு, எந்த நோய் நொடி வந்தாலும் இறந்தாலும், அதற்கெல்லாம் காரணம் ஆலமரப் பிசாசு தான் என்று ஊரார் நம்பினார்கள். மந்திரவாதிகள் பெருகினர். அந்த ஊரில் வாழ்க்கையே பாழானது.







ஆனாலும் இரவு வேளைகளில் கோவிந்தன் ஆலமரத்தின் கீழ் காவல் காத்தே வரலானான்.




பிசாசு ஒன்று இருந்து எங்கள் உயிரை வாங்குகிறது.
ஐயா! இங்கே யாருக்கும் பாதுகாப்பு இல்லையே!
ஏன் இப்படி பயப்படுகிறீர்கள்?
இந்த நிலையில் தான் பழனி தன் நாயுடன் அந்த ஊரை அடைந்தான். மங்கப்பன் பிசாசு பற்றியும், அதனால் ஊரில் ஏற்பட்டுள்ள கஷ்ட, நஷ்டங்கள் பற்றியும் தெரிந்து கொண்டான்.


ஊரார் மனதிலிருந்து அப்பிசாசு பற்றிய பயத்தை அகற்றினால் தான் அவர்களது வாழ்வு மலரும் என எண்ணி அவன் அதற்கு ஒரு திட்டம் தீட்டினான். அன்றிரவே ஆலமரத்தை அடைந்து அதன் மீது ஏறி உட்கார்ந்து கொண்டான்.


நள்ளிரவில் கோவிந்தன் அம் மரத்தடியே வந்து பிசாசு வேஷம் போட்டுக் கொண்டு அந்த மரத்தைச் சுற்றிச் சுற்றி வருவதை பழனி பார்த்தான்.
யாரோ மங்கப்பபிசாசு போலநடித்து ஊராரை பயமுறுத்தி வருகிறான். இதில் அவனது சுயநலம் உள்ளது. சுயநலத்தால் ஊராரைநடுநடுங்க வைக்கும் அந்தக்சுயவன் யார்என்று அவர்களுக்குக்காட்ட வேண்டும்.

காலையானதும் கோவிந்தனைப் பின் தொடர்ந்து அவனது வீட்டைக்கண்டு கொண்டு பழனி அவனைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டான்.

அந்த வீடு யாருடையது?

மங்கப்பனின் மகன் கோவிந்தனுடையது தான், ஐயா!

அவன் எங்கு போகிறான் எனக் கண்காணித்து பழனி அதற்கு அடுத்த வீட்டிற்குச் சென்றான்.

மங்கப்பன் உயிரோடு இருந்த போது வட்டிக்கு வட்டி வாங்கி எங்களைக் கசக்கிப் பிழிந்தான். இறந்த பிறகோ பிசாசாகி ஆல மரத்தில் இருந்து கொண்டு அலற வைக்கிறான்.

அந்தப் பிசாசு தான் படாத பாடு படுத்துகிறதென மக்கள் நடு நடுங்குகிறார்கள்.

தன் தந்தை பிசாசாகி விட்டார் என்ற வதந்தியைப் பரப்பி, பிசாசு வேஷத்தில் மக்களைப் பயமுறுத்தி வரும் கோவிந்தனின் உள்நோக்கம் என்ன? இரவில் தன் வீட்டில் திருடர்கள் புகுந்து விடுவார்களே என்று கூடப் பயப்படாமல் அவன் ஏன் அந்த வேளையில் பிசாசு போலாகி ஆல மரத்தைச் சுற்றிச் சுற்றி வர வேண்டும்?

அன்றிரவு பழனி நீளமான தாடியையும் மீசையையும் ஒட்ட வைத்துக் கொண்டு கோவிந்தனின் வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டினான்.

- தொடரும்.



# பாரத தரிசனம் வாசகர்களுக்கான போட்டி

இந்த இதழிலுள்ள வினாக்களின் விடைகளை அடுத்த இதழில் பிரசுரிப்போம்.அதற்குள் இவற்றின் விடைகளை அறிய முயன்று பாருங்கள்.

## 1



அ). சீதாதேவியின் தந்தை ஜனக மன்னர் ஆண்ட விதேக நாடு தற்போதைய இந்தியாவின் எப்பகுதி?

ஆ). பழங்காலத்து கோசல நாடு என்பது தற்போதைய இந்தியாவின் எப்பகுதி?

இ). லிச்சவிகள் வசித்த வைசாலி தற்போதைய இந்தியாவின் எப்பகுதி?

ஈ). காந்தார நாடு என்பது தற்போது எப்பகுதி?

## 2

பிராம்மண வாலிபன் ஒருவன் காட்டு வழியே செல்கையில் வழி தவறி விட்டான். மலைச் சாதியினர் அவனைத் தம் தலைவனிடம் அழைத்துச் சென்றார்கள். அவன் அத்தலைவனின் மகளை மணந்து கொண்டு அங்கேயே இருந்து விட்டான்.

அத்தலைவன் தினமும் அதிகாலையில் எழுந்து எங்கோ போய் வருவதை அந்த வாலிபன் கவனித்தான். தந்தை ஒரு குகையிலுள்ள தன் வம்சத்துக் குல தெய்வத்தை தினமும் போய் வழிபட்டு வருவதாக அந்த வாலிபன் தன் மனைவி வாயிலாக அறிந்தான். குகையிலுள்ள அத்தெய்வத்தைத் தான் பார்க்க வேண்டுமென்று அந்த வாலிபன் பிடிவாதம் பிடிக்கவே மலைச் சாதியினரின் தலைவன் அவனது கண்களைக் கட்டி அவனை அக்குகைக்கு அழைத்துச் சென்றான். அப்போது அவ்வாலிபன் தான் மறைத்து எடுத்துச் சென்ற கடுகை வழிநெடுகப் போட்டுக் கொண்டே போய் அக்குகையிலிருந்து திரும்பி வந்தான்.

நாலைந்து நாட்களுக்குப் பின் அவன் தனியாகப் போய் கடுகுச் செடிகள் முளைத்திருந்த அடையாளம் கொண்டு அந்தக் குகைக்குள் சென்றான். அங்கு தன் மாமனார் தினமும் பூசிக்கும் பொருளை எடுத்துக் கொண்டு தலைநகருக்கு ஓடிப் போய் விட்டான். அந்நாட்டு மன்னன் அவனிடமிருந்து அப் பொருளைப் பெற்று தான் புதிதாகத் தயாரித்து வந்த விக்கிரகத்துள் வைத்து அதை ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தான்.

இன்றும் அது ஒரு புகழ் பெற்ற ஆலயத்தில் வழிபடப்படுகிறது.

1. அந்த ஆலயம் எது ?
2. அந்த வாலிபன், அவன் மனைவி, அவன் மாமனார் ஆகியோரின் பெயர்கள் என்ன?
3. அந்நாட்டு மன்னன் யார்?



கதையின் சரியான முடிவு எழுதி நல்ல பரிசைப் பெறுங்கள்

# ஆக்கப் பூர்வமான போட்டி

ஒரு சிறுகதையின் முற்பகுதி இங்கு கொடுக்கப் பட்டுள்ளது. இதன் பிற்பகுதியைச் சரியாக அமைத்து எழுத வேண்டும். கதைக்குத் தலைப்பும் கொடுக்க வேண்டும். உங்களுடைய பகுதி 200 சொற்களுக்குள் இருக்க வேண்டும். மிகச் சிறந்த படைப்பிற்குக் கவர்ச்சிகரமான பரிசு அளிக்கப்படும். இப்போட்டி இளைஞர்களுக்கு மட்டுமே. உங்கள் பெயர், வயது, படிக்கும் வகுப்பு, பள்ளி, பின்கோடுடன் கூடிய முகவரி முதலியவற்றைத் தெளிவாக எழுதவும். உங்களுக்கு இது ஓர் அரிய வாய்ப்பு. இனி கதையைப் படியுங்கள்.

வெங்கப்பன் ஒரு சிறு விவசாயி. தனக்குள்ள சிறிய நிலத்தில் அவன் சோளத்தைப் பயிரிட்டான். அவனே பாடுபட்டதால் அக்கதிர்கள் நன்கு முதிர்ந்து அறுவடைக்குத் தயாராக இருந்தன. இரண்டு மூன்று நாட்களில் அவற்றை அறுத்து விடலாம் என்றும் அது வரை அவை திருடு போகாமலிருக்க இரவு வேளைகளில் கண் விழித்துக் காவல் புரிய வேண்டுமென்றும் தீர்மானித்துக் கொண்டான்.

அதன்படி முதல் நாளிரவு காவல் காக்க அவன் தன் நிலத்தில் ஒரு மூலையில் படுத்துக் கண்ணயராமல் காவல் புரியலானான். அப்போது யாரோ கதிர்களை அறுக்கும் சத்தம் அவன் காதில் விழுந்தது. உடனே அவன் எழுந்து ஓடிப் போய்ப் பார்த்தான். பக்கத்து கிராமத்தைச் சேர்ந்த நான்கு பேர்கள் தான் அவர்கள். கதிர்களைத் திருட வந்த அவர்களில் ஒருவன் பிராம்மணன். மற்றவன் பொற்கொல்லன். மூன்றாமவன் வட்டிக் கடைக்காரன். நான்காமவன் அவனைப் போன்ற சிறு விவசாயி.

அந்த நால்வரையும் தான் ஒருவனாக இருந்து எதிர்க்க வெங்கப்பன் பயப்பட்டான். யாரையாவது உதவிக்கு வரும்படி உரத்த குரலில் கூப்பிடலாம் என்று கூட அவன் நினைக்கவில்லை. ஏனெனில் அப்படிக் குரல் கொடுத்தால் அந்த நால்வரும் ஓடிப் போய்விடுவார்கள். அதனால் அதற்கு அவன் வேறொரு வழியைக் கண்டுபிடித்தான். தன் கையிலிருந்த தடியை அவன் தூர விட்டெறிந்தான்.

வெங்கப்பன் அவர்களை ஒவ்வொருவராக எப்படி எதிர்த்தான்? அவர்கள் தங்களது தோல்விக்கு வெட்கப்பட்டார்களா? இதற்கு நீங்கள் கூறும் முடிவு சரியானதாயும் ஏற்றதாயும் இருக்க வேண்டும். இக்கதைக்கு ஏற்ற தலைப்பையும் நீங்கள் கொடுக்க வேண்டும். நீங்கள் அனுப்பும் படைப்புகளின் மேல் ஆக்கப்பூர்வமான போட்டி என்று எழுதி எமக்கு ஜனவரி 20க்குள் கிடைக்குமாறு அனுப்ப வேண்டும்.

## டிசம்பர் 2000 பாரத தரிசனப் போட்டி வினாக்களின் விடைகள்

1. அ). குசேலர் எனப்பட்ட சுதாமா
   ஆ). பிரகலாதன்
   இ). துருவன்
   ஈ). ஹரிச்சந்திரனின் மகன் லோகிதாசன், ராணி சந்திரமதி
   உ). அபிமன்யு
2. மெய்கண்டார், சதாசிவாச்சாரியார்



# யார் மகன் ?

ஆப்பிரிக்காவில் ஒரு காட்டின் பக்கத்தில் டோடுன் என்ற விறகுவெட்டி இருந்தான். அவன் தினமும் விறகு வெட்டி, அருகிலிருந்த நகரத்திற்குக் கொண்டு போய் விற்றுப் பணம் சம்பாதித்து வந்தான். அவனது எட்டு வயது மகன் டுண்டி காட்டிற்குத் தன் தந்தையுடன் போய் அவனுக்கு உதவி வந்தான். இதனால் டோடுன் மகிழ்ந்து போனான்.

ஒரு நாள், டோடுன் காய்ச்சலாகப் படுத்துவிடவே, அவன் தன் மகன் டுண்டியை அழைத்து, "மகனே! நீ காட்டிற்குப் போய் விறகு கொண்டு வா..!", என்று கூறி அனுப்பினான். அவனும் வீட்டை விட்டுக் கிளம்பினான். ஆனால், வழியில் அவன் வயதுச் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருக்கவே, டுண்டி அவர்களோடு சேர்ந்து விளையாடினான். உச்சி வேளையான பிறகே, அவன் காட்டிற்குள் போய் கீழே கிடந்த கொஞ்சம் கட்டைகளை எடுத்து, சிறு சுமையாகக் கட்டித் தூக்கிக் கொண்டு வந்தான்.

டுண்டி சிறு விறகுச் சுமையைக் கொண்டு வந்தது கண்டு கடும் கோபம் கொண்டு டோடுன் படுக்கையிலிருந்து எழுந்து வந்து, "என்னடா விறகு கொண்டு வந்திருக்கிறாய்? இதை விற்றால் என்ன கிடைக்கும்? இப்படிக் கொண்டு வந்தால் பட்டினி தான் கிடக்க வேண்டும். இப்படியா வேலை செய்வது", என்று கூறிக் கன்னத்தில் பளாரென்று ஓர் அறை விட்டான். அறைபட்ட சிறுவன் வீட்டை விட்டு ஓடினான்.

அதைக் கண்ட டோடுன், "போ..!

ஆப்பிரிக்க நாட்டுப் பழங்கதை

போ..!! இனிமேல் இங்கே வராதே. வந்தால் காலை ஒடித்து விடுவேன்", என்று கத்தினான். வெகு தூரம் ஓடிக் களைத்துப் போனதால், அவன் வழியில் கண்ட ஒரு மரத்தடியில் படுத்துத் தூங்கி விட்டான்.

சற்று நேரத்தில், நகரத்து வியாபாரி ஒருவன் தன் வேலையாட்களுடன் அவ்வழியே வந்தான். அவன் மரத்தடியில் படுத்திருந்த சிறுவனை எழுப்பி, "யாரப்பா நீ? இங்கே ஏன் படுத்திருக்கிறாய்?", என்று கேட்டான் டுண்டியும், "எனக்கு வீடு வாசல் எதுவும் இல்லை. இப்போது ஒரே பசியாக இருக்கிறது", என்றான். வியாபாரியும் உடனே அவனுக்கு உணவைக் கொடுத்தான். பிறகு அவன், "நீ என்னுடன் என் வீட்டிற்கு வா. அங்கே வளரலாம், எனக்கும் குழந்தை இல்லை. உன்னை என் மகனாகக் கருதி வளர்க்கிறேன்", என்றான். டுண்டியும் அதற்கு இணங்கி, வியாபாரியுடன் சென்று, அவனது வீட்டில் வளர்ந்து வரலானான்.

டோடுன் கோபத்தோடு டுண்டியை விரட்டினாலும், அவன் எங்கே போய் விடுவான் திரும்பி வந்து விடுவான் என்று இரவில் வெகு நேரம் வரை காத்துப் பார்த்தான். அவன் வராது போகவே, தன் மனைவியை அனுப்பி அக்கம் பக்கத்து வீடுகளில் விசாரிக்கச் சொன்னான். எங்கு விசாரித்தும் டுண்டியைப் பற்றி எவ்விதத் தகவலும் கிடைக்கவில்லை.

வருடங்கள் கழியலாயின. டுண்டி வியாபாரியின் வீட்டில் வளர்ந்து அவனது வியாபாரத்திலும் உதவி வந்தான்.

டோடுன் ஒரு நாள் தனக்குக் காட்டில் கிடைத்த தந்தத்தை விற்க நகரத்திற்குச் சென்றான். அதை விற்று விட்டு வரும் போது குதிரை மீது ஒரு வாலிபன் அமர்ந்து வந்து கொண்டிருப்பதைக் கண்டு அவன் ஆச்சரியப்பட்டு நின்றான். அக்குதிரை அவனருகே வந்ததும், அவன் அதை நிறுத்தி, அதன் மீது அமர்ந்திருந்தவனிடம், "நீ டுண்டி தானே?", என்று கேட்கவே, அவனும் கீழே இறங்கி அவனை உற்றுப் பார்த்து, "அப்பா நீங்களா? நான் ஒரு வியாபாரியின் வீட்டில் இருக்கிறேன். அவர் என்னைத் தன் மகனாக வளர்த்து வருகிறார். என்னுடன் வீட்டிற்கு வாருங்



கள்", என்று கூறி அவனை வியாபாரி யின் வீட்டிற்கு அழைத்துச் சென் றான். அவன் தன் தந்தையை வியா பாரிக்கு அறிமுகப்படுத்தினான். வியாபாரியும் டோடுனை அன்றிரவு தன் வீட்டிலேயே சாப்பிட்டு விட்டுத் தங்குமாறு கேட்டுக் கொண்டான்.

டோடுன் அன்றிரவு வியாபாரி யின் வீட்டில் தங்கிவிட்டு, மறுநாள் காலை கிளம்பும்போது வியாபாரியிடம், "நான் என் மகன் டுண்டியை என் னோடு அழைத்துப் போகப் போகி றேன்", என்றான். வியாபாரியோ, "அதெப்படி முடியும்? அவன் என் மகன். இவ்வளவு வருடங்களாக நாங் கள் அவனை பாசத்துடன் வளர்த்திருக் கிறோம். இப்போது நீங்கள் அவனை உங்கள் மகன் என்கிறீர்கள். எனவே, இந்தப் பிரச்சினைக்கு முடிவு காணும் படி டுண்டியிடமே விட்டு விடு வோம். இன்று நீங்கள் இங்கேயே தங்கி இருங்கள். நாளைக் காலையில் அவன் தீர்ப்பைக் கூறட்டும்", என்றான்.

மறுநாள் காலையில் வியாபாரி, டோடுனையும், டுண்டியையும் அழைத்துக் கொண்டு ஒரு நீண்ட வாளை எடுத்துக் கொண்டு, ஜன நட மாட்டமே இல்லாத ஓர் இடத்தை அடைந் தான். அவன் தான் எடுத்து வந்த வாளை டுண்டியிடம் கொடுத்து, "மகனே...! நீ இவருடன் போய் வசிக்க விரும்புவதானால், இந்த வாளால் என் தலையை வெட்டிவிடு. என்னுடன் வசிக்கப் போவதானால் டோடுனின் தலையை வெட்டிவிடு", என்றான்.

டுண்டி வாளை வாங்கிக் கொண்டு வியாபாரியையும், டோடு னையும் பார்த்து விட்டு, "நான் உங்கள் இருவர் தலைகளையும் வெட்டப் போவ தில்லை. நான் என்ன செய்ய வேண்டு மென்று எனக்குத் தெரிந்து விட்டது. அதனால் என் தலையைத் தான் நான் வெட்டிக் கொள்ளப் போகிறேன்", என்று கூறி வாளை உயர்த் தினான். அப்போது இருவருமே அவனது கைகளைப் பிடித்துக் கொண்டு, "நில். வேண்டாம். இதற்கு ஒரு முடிவு நம் எல் லோரும் ஒன்றாகவே வாழ்வது தான்", என்றார்கள். இதன் பிறகு டோடுன் தன் மனைவியை அழைத்துக் கொண்டு வியாபாரி யின் வீட் டிற்கு வந்து விட்டான்.

இதன் பின் யாவரும் ஒரே குடும் பமாக இருந்து மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தார்கள்.




THE AMUL CHEESE BOY
IN PICNIC PANIC


One bright sunny day...


...a picnic is in progress.


Little Munnu Verma crawls away.
GURGLE


Suddenly, huge rocks come tumbling down the mountain.
RUMBLE


Amul cheese boy eats an Amul cheese slice...


...and becomes strong and powerful.


He smashes the falling rocks...
BANG


...reducing them to small pieces.
CRACK


Munnu is rescued and back with his family.


All thanks to the cheese that has more milk in it.


Amul cheese slices.
Amul cheese. Yes please!
Amul



# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

**போட்டோ வாக்கியப் போட்டி**

(முகவரி கீழே தரப்பட்டுள்ளது)






போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி ஜனவரி 25-ம் தேதிக்குள் வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் மார்ச் 2001 மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

**வாழ்த்துக்கள்**



**நவம்பர் 2000 போட்டியில்**
**பரிசு பெற்றவர் :**
**மா.வி. கோவிந்தராசன்**
**43, பெரியகடை தெரு**
**ஆரணி - 632 301.**



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : கால்களின் மிதிப்பில் என் பயணம்
இரண்டாவது போட்டோ : கைகளின் துடுப்பில் என் பயணம்

